சென்னைப் பதிவு என் ௬௫௰௬ கஉ பக்கங்கள் விலை ரூ. 0—1—6 தந்தி விலாசம்:—"ஊழியன்"

சந்தா விபரம்.
வருடச் சந்தா ...
ஆறுமாதச் சந்தா ...
வெளிநாடு வருடச்சந்தா ...

விளம்பர விகிதம்.

# ஊழியன்.

## The "Oolian," a Nationalist Weekly.

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

நல்லவை வாழ்க! அல்லவை ஆழ்க!!

மலர். கரு. } காரைக்குடி, ஆங்கீரச-ஹூ மாசி-மீ ௨௨ புதன்கிழமை. { இதழ் அ

(முன் தொடர்ச்சி.)

மேலும், இப்பொழுது நெசவுத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளருக்கு வேலை கிடைக்காமற் போகாது. அவர்கள் தங்கள் கிராமங்களுக்குத் திரும்பிச் சென்று, கையால் நூற்றுக் கையால் நெய்வும் வேலைகளை மேற்கொள்ளுவார்கள். அன்றியும், துணி வியாபாரத்திலுள்ள மற்றவர் அந்த ஸ்தாபனங்களிலும் துணிகளை விற்பனைக்குக் கொண்டு வரும் வேலைகளிலும் முன் போலவே யிருந்து வருவார்கள். மனிதர் வகுப்பில் எவருக்கும் வேலையில்லாத் திண்டாட்டத்தை உண்டாக்காமலும், நாம் அழிக்கும் துணிகளின் அளவில்கொஞ்சமும் குறையாமலும், முழு மாற்றத்தையும் உண்டாக்கிவிடலாம். நிலமில்லாத தொழிலாளிகளும் விவசாயிகளும் நூற்று நெய்வார்கள். இதில் "அவர்கள் சுய நலன்களின் கட்டளைக்கு மேல் அதிகமாக அவர்களை உழைக்கச் செய்யும் எந்த நிர்ப்பந்தமும் பலவந்தமு"மில்லை. ஆதலால், இது அவர்களது உற்பத்தித்திறமையை, அதிகரிக்கின்றது. மேலும், காலக்கிரமத்தில் கதரின் விலை குறையும் என்றும் அதன் நயம் அபிவிருத்தியடையும், எனவும் ஜனங்கள் அதை வாங்குவார்களென்றும் உத்தேசித்துக் கொண்டிருக்கிறோம். ஆதலால், துணி உற்பத்தியில் இந்த மாறுதலைச் செய்வதால், மொத்தத் துணி உற்பத்தியின் அளவு குறையாதென்பதும், அவற்றில் கிடைக்கும் திருப்தியும் குறையாதென்பதும் தெளிவு, எனவே, மகாத்மாஜீயால் யோசனை கூறப்பட்டிருக்கும் ஏற்பாட்டால் அதமபட்சம் தேசத்தின் லாபம் குறையாதென்ற முடிவுக்கு நிச்சயமாக வரலாம்.

* * *

தேசத்தின் லாபம் குறைவதற்குப் பதிலாக அதிகரிக்கும் என்பதை இப்பொழுது நிரூபிக்கிறேன். நம்மால் விளைவிக்கப் படும் பஞ்சைத் துணிகளாக நெய்வதற்காக, அநேகம் கோடி ரூபாய்களை நாம் ஆண்டுதோறும் அந்நிய நாடுகட்கு அனுப்பி வருகின்றோம். அத்தொகை மிச்சமாகி, நம்நாட்டில் பட்டினியால் எலும்பு தெரிய மெலிந்து கிடப்போர் கைக்குப் போகும். மேலும், நமது நாட்டிலுள்ள ஆலைகள், அந்நிய நாட்டு இயந்திரங்களை வாங்குவதற்காக ஆண்டுதோறும் கொடுக்கும் விலைகள் மிச்சமாகும். கையால் பஞ்சு அடிக்கவும், கடையவும், நூற்கவும், நெய்யவும் வேண்டிய சருவிகளின் உற்பத்தியால், சுதேசி மரவேலையும் தச்சவேலையும் அபிவிருத்தியடையும். இவ

## மலர் மணம்.

### சர்க்காவும் செல்வ நலனும்.

( திரு. வி. பி. எல். மாதுர். )

ற்றாலும், இவை போன்ற பிறகாரணங்களாலும், பொருள்களை வாங்கும் தென்பு நமது ஏழை ஜனங்களுக்கு அதிகரிக்கும்; அவர்களுடைய வாழ்க்கை யந்தஸ்து அபிவிருத்தியடையும். அவர்களுடைய உற்பத்தித்திறமை அபிவிருத்தியுறும். அது தேசத்தின் லாபத்தை அதிகரிக்கும், ஆகையால், மகாத்மாஜியின் திட்டத்திற்கு, புரொபஸர் பிகௌ அவர்களின் முதல் சித்தாந்தம் பொருந்துகின்றது. மகாத்மாஜீயின் திட்டம் தேசத்தின் லாபத்தை அதிகரிப்பதால், பொருளாதார நலனை மிகுவிக்கின்றது. ஆனால், அது ஏற்றத்தாழ்வுடைய செல்வ விபாகத்திற்குக் கேடு பயக்காமலிருப்பதும், அது ஏறியிறங்கக்கூடிய தன்மையை அதிகப்படுத்தாதென்பதும் இப்பொழுது விளக்கிக் காட்டப்படும்.

* * *

செல்வரிடையும் ஏழைகளிடமும் பொருள் விபாகமாகும் காரியத்தை மகாத்மாவின் திட்டம் எவ்வாறு பாதிக்கும் என்பதை நாம் கவனிப்போம். தற்பொழுது, துணி ஆலைத் தொழில்களின் லாபம், சில லட்சம் தொழிலாளருக்கும், இந்தியரும் அந்நியருமான சில ஆயிரம் முதலாளிகட்கும் போகின்றது. மகாத்மா காந்தியால் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும் திட்டத்தில், அந்த லாபம் ஏறக்குறைய முப்பது கோடிக் குடியானவர்க்கும் தொழிலாளர்கட்கும்போகும். ஏழைகளின் பங்கு நிச்சயம் அதிகரிக்கும். அவர்களுக்குப் பூரண ஆகாரமும், தங்கள் உடம்பை மூடிக்கொள்ள முன்னையினும் அதிகத் துணியும் அவர்கட்குக் கிடைக்கும். இப்பொழுதோ, அவர்கள் அரைப்பட்டினி கிடந்து, பாதித்துணியே உடுத்துகின்றார்கள். தங்களுடைய முக்கிய வருமானங்களை இழப்பதால் செல்வவந்தர் அடையக் கூடிய மொத்த அதிருப்தியைவிட, தங்களுக்குக் கிடைக்கக் கூடிய அதிகப்படி வருமானங்களால் ஏழைகள் அடையக்கூடிய மொத்தத் திருப்தி, மிக அதிகமாயிருக்கும். ஆதலால், புரொபஸர் பிகௌ அவர்களின் இரண்டாவது சித்தாந்தமும் மகாத்மாவின் திட்டத்துக்குப் பொருந்துகின்றது. தேசத்தின் லாபத்தைக் குறைக்காமல், ஏழைகள் பெறும் லாபப்பங்கை அதிகப்படுத்துவதால், கதர் இயக்கம் தேசத்தின் செல்வநலத்தை அதிகரிக்கின்றது. அப்பங்கு ஏறியிறங்கக் கூடிய தன்மையை அதிகப்படுத்தாமலே ஏழைகளின் லாபப்பங்கை அது அதிகரிக்கச் செய்யும் என்பது பின்வரும் பாராவில் விளக்கப்படும். மகாத்மாகாந்தியின் திட்டம், தேசத்தின் லாப விகிதத்தின் ஏறியிறங்கக் கூடிய தன்மையை அதிகரிக்கச் செய்யாததோடு, அதனைக் குறைக்கவும் குறைத்து விடும் என்பதும் விளங்கும். ஏழைகளின் வருமானம் ஏறியிறங்கக்கூடிய தன்மையையும் அது குறைத்துவிடும்.

* * *

தற்பொழுதிருந்துவரும் முதலாளித்துவ உற்பத்தி முறையின் முக்கியமான அம்சங்கள் சிலவுண்டு; அவை தேவையை எதிர்பார்த்து உற்பத்தி செய்தல், தூரதேசங்களில் விற்பனை, போட்டிமுறையில் உற்பத்தி ஆகியவையாகும். இதனால், சில சமயம் தேவைக்கு மேற்பட்ட உற்பத்தியும் சில சமயம் தேவைக்கு மிகக்குறைவான உற்பத்தியும் செய்யப்பட்டு விடுவது இயற்கையாகின்றது. ஏனெனில், தேவை எவ்வளவிருக்கும் என்பதை முன்னூடிகவனிப்பதில் தவறு ஏற்படுதல் இயல்பேயாகும்; மேலும், குறிப்பிட்ட விற்பனை ஸ்தலத்தைக் கைப்பற்றிக் கொள்ளுவதற்காக உண்டாகும் உற்சாகத்தால், போட்டிபோடும் பற்பலருள் ஒவ்வொருவரும், மற்றப் போட்டியாளர் எவ்வளவு உற்பத்திசெய்கின்றார்கள் என்பதை யறியாமலே, பெரியதோர் அளவு உற்பத்தி செய்துவிடுகின்றார்கள். உற்பத்தி முறையிலுள்ள இந்தக் குறையே, தேசத்தின் லாபம் ஏறியிறங்கக்கூடிய தன்மைக்கு முக்கியக் காரணமாயிருக்கின்றது. இந்நாட்டுத் துணி உற்பத்தித் தொழில் சம்பந்தப்பட்ட மட்டில், இந்த முறையான உற்பத்தியைக் கதர் இயக்கம் திருத்திவிடும்; தேசத்தின் லாபம் ஏறியிறங்கக்கூடிய தன்மையும் அந்த அளவுக்குத் திருந்திவிடும். இந்தத் தொழிலால் தேசத்திற்குக் கிடைக்கும் வருமானம் மாத்திரமன்றி, இதில் ஈடுபட்டிருக்கும் குடியானவருடையும் தொழிலாளருடையவும் வருமானமும் நிலைப்படும். அவர்கள் தங்களுக்கு வேண்டிய துணிகளையும், முக்கியமாகத் தாய் நாட்டில் விற்பனையாகக் கூடிய அளவு துணிகளையும் அவர்கள் உற்பத்திசெய்வார்கள். இதனால், அவர்களுக்கு எப்பொழுதும் வேலைகிடைக்குமென்ற நிச்சயம் ஏற்படுகின்றது; அதனால், ஜீவனத்துக்குச் சம்பாதித்துக் கொள்ளுகிறார்கள்.

* * *

மேலும், தற்பொழுது, இந்தியக் குடியானவர்கள் தங்கள் ஜீவனத்திற்கு விவசாயத்தையே முக்கியமாக நம்பியிருக்கிறார்கள். "அதின் வருமானமோ, மழையுடன் சூதாட" வேண்டியதாயிருப்பதால், மிக அநிச்சயமானதா யிருக்கின்றது. அவர்கள் இராட்டினத்தையும் கைத்தறியையும் கைக்கொள்ளுவதால், அவர்களுடைய வருமானங்கட்கு ஓரளவு நிலைத்த தன்மை ஏற்படும். ஆதலால், தேசத்தின் லாபம், அதில் ஏழைகட்குக் கிடைக்கும் பங்கு ஆகிய இரண்டின் ஏறியிறங்கக் கூடிய தன்மைகளையுமே கதர் இயக்கம் குறைத்து விடுமென்பது தெளிவு.

* * *

ஆதலால், புரொபஸர் பிகௌ அவர்களின் மீதியிரண்டு சித்தாந்தங்களையும் மகாத்மாஜீயின் பரிகாரம் திருப்தி செய்கின்றது. இந்தச் சித்தாந்தங்களின் ரீதியாகப் பார்க்கும்பொழுது, கதர் இயக்கம் தேசத்தின் செல்வ நலத்தை அபிவிருத்தி செய்யும் என்ற தவிர்க்கமுடியாத நிச்சய முடிவுக்கு நாம் வரவேண்டியதா யிருக்கின்றது.

—"மாடர்ன் ரிவ்யூ"

[ஒரு திருத்தம்:—சென்றவார 'ஊழியன்' முதற்பக்கத்தில் உள்ள இக்கட்டுரையின் முற்பகுதியின் இரண்டாவது பாராவில் புரொபஸர் பிகௌ அவர்களின் முதல் சித்தாந்தத்தில் "ஜனங்கள்மீது நிர்ப்பந்தமோ பலவந்தமோ செய்யாமல், அவர்களது சுய நலன்களின் கட்டளைக்குமேல் அதிகமாக உழைக்கச் செய்யும் எந்த இயக்கமும்" என்றிருப்பதை, "ஜனங்களை அவர்களது சுய நலன்களின் கட்டளைக்குமேல் உழைக்குமாறு நிர்ப்பந்தமோ பலவந்தமோ செய்யாத எந்த இயக்கமும்" என்று திருத்திக் கொள்ளவும்.]

# கதர்ப்பாதுகாப்பு.

## சட்டசபையில் மசோதா.

### பொதுஜன அபிப்பிராயத்தை அறியவேண்டுமாம்.

உத்தியோகப் பற்றற்ற அங்கத்தினர்களின் மசோதாக்களைப்பற்றி விவாதிக்க இந்தியச் சட்ட சபையின் கூட்டம் பிப்பிரவரி கூ-ம் தேதி மீண்டும் கூடியது. அங்கத்தினர்களில் பலர் இன்றையக் கூட்டத்துக்கு வரவில்லை. அங்கத்தினர்கள் தங்களுக்குள் கலந்து பேசிக்கொண்டதன் பயனாக ஸர் ஹரி சிங் கவர் இந்தியன் பீனல் கோட் திருத்த மசோதாவைப் பிரரேபிக்கவில்லை. திரு. கயாப் பிரசாத் சிங் கொண்டுவந்தப் கதர் பாதுகாப்பு மசோதா ஆலோசனைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. திரு. கயாப் பிரசாத் தமது மசோதா அபிப்பிராய பேதத்துக் கிடமானதல்ல வென்றும் 'கதர்', 'காதி' என்ற பெயர்கள் இந்தியாவில் கைராட்டினத்தில் நூற்கப்பட்ட நூலைக்கொண்டு கைத்தறியில் நெய்யப்பட்ட ஆடைகளுக்கே வைக்கப்பட்டிருப்பதால் அந்தப் பெயர்களுக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டியிருப்பதாகவும் இந்தியாவிலும் வெளியிடங்களிலும் போலிக் கதர் உற்பத்தி செய்பவர்களும் இந்தப் பெயரை உபயோகிப்பதால் வாங்குபவர்கள் உண்மையான கதர் என்று போலித் துணியை வாங்கி ஏமாறுவதாகவும் அவ்விதமில்லாமலிருந்தால் இந்தத் தொழில் சிறந்த தேசியக் கைத் தொழிலாக விரைவில் அபிவிருத்தியடையு மென்றும் கூறினர்.

ஸர் ஜோஸப் போர் இம் மசோதாவைப்பற்றி ஜூலை ஙக-ம் தேதிக்குள் பொதுஜன அபிப்பிராயத்தை அறிய இதனைச் சுற்றறிக்கை மூலம் அனுப்ப வேண்டுமெனப் பிரரேபித்தார். அவர் அபிப்பிராயங்கள் எவ்வித மிருக்கிறதென்பதை அறிந்த பின்னரே அரசாங்கத்தார் எவ்விதம் நடப்பதென்பதை முடிவு செய்வார்கள் என்றும் 'காதி' 'கதர்' என்பவை வியாபாரமுறையில் கைராட்டினத்தில் நூற்கப்பட்ட நூலைக்கொண்டு கைத்தறியால் நெய்யப்பட்ட ஆடையைத்தான் குறிக்குமா வென்பது தெரியவேண்டு மென்றும் இல்லாவிட்டால் வியாபாரமுறைக்கு விரோதமாகத் தாங்கள் தலையிட்டதாக ஆகுமென்றும் ஆகவே கவனித்துச் செய்யவேண்டி யிருப்பதாகவும் கூறினர்.

திரு. மித்ரா, திரு. ரங்க ஐயர், திரு. லால்சந்த் நாவல்ராய், ஜனப் அஸர் அலி ஆகியவர்கள் மசோதாவை ஆதரித்துப் பேச அதைச் சுற்றறிக்கை மூலம் அனுப்புவதென்ற பிரரேபனை நிறைவேறிவிட்டது.

# சிங்கப்பூர் விடுமுறை நாட்கள்.

(கசுஙங-வரு)

சிங்கப்பூர் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் வர்த்தக சங்க கசுஙஉ-ம் ஆண்டு அறிக்கையில் தந்திருக்கும் சிங்கப்பூர்க் காலனியின் கசுஙங-வரு விடுமுறை நாட்களின் விவரம்:—

| | | | |
|---|---|---|---|
| புதுவருட நாளை யொட்டிவரும், திங்கட்கிழமை | ஜனவரி உஉ | திங்கட்கிழமை | பப்ளிக் விடுமுறை நாள் |
| சீனப் புதுவருடம் | ஜனவரி உகூஉ<br>,, உஎஉ | வியாழக்கிழமை<br>வெள்ளிக்கிழமை | பாங் விடுமுறை நாள் |
| அரிராய பூசை | ஜனவரி உஅஉ | சனிக்கிழமை | ,, |
| தைப்பூசம் | பெப்ரவரி கூஉ | வியாழக்கிழமை | ,, |
| அரிராய ஹாஜீ | ஏப்ரல் கூஉ | ,, | பப்ளிக் விடுமுறை நாள் |
| நல்ல வெள்ளிக்கிழமையும் | ஏப்ரல் கசஉ | வெள்ளிக்கிழமை | ,, |
| அதற்குப்பின்வரும் நாளும் | ,, கருஉ | சனிக்கிழமை | ,, |
| ஈஸ்டர் திங்கட்கிழமை | ,, கஎஉ | திங்கட்கிழமை | பாங் விடுமுறை நாள் |
| ராஜா பிறந்தநாள் | ஜூன் கூஉ | சனிக்கிழமை | ,, |
| விட் திங்கட்கிழமை | ,, ருஉ | திங்கட்கிமை | ,, |
| ஆகஸ்டுமீ முதல் திங்கட்கிழமையும் அதற்கு முந்திய சனிக்கிழமையும் | ஆகஸ்டு ருஉ<br>,, எஉ | சனிக்கிழமை<br>திங்கட்கிழமை | பப்ளிக் விடுமுறை நாள்<br>பாங் விடுமுறை நாள் |
| தீபாவலி | அக்டோபர் கஅஉ | புதன்கிழமை | பப்ளிக் விடுமுறை நாள் |
| சமாதான ஞாபக நாள் | நவம்பர் ககஉ | சனிக்கிழமை | |
| கிறிஸ்த்மஸ் நாளும் அதற்கு மறுநாளும் | டிசம்பர் உருஉ<br>,, உகூஉ | திங்கட்கிழமை<br>செவ்வாய்க்கிழமை | ,,<br>,, |





# சிங்கப்பூர்ச் செட்டியார் சங்கம்.

சிங்கப்பூர் நாட்டுக் கோட்டைச் செட்டியார்களின் வர்த்தக சங்கத்தின் கசுஙஉ-ம் வருடத்திய நீண்ட அறிக்கை கிடைக்கப் பெற்றோம். அதில் மாதாந்திர நிர்வாக சபைக் கூட்டங்கள், விசேஷ நிர்வாக சபை கூட்டங்கள், சப்கமிட்டிக் கூட்டம், விசேட மகாசபைக் கூட்டங்கள் ஆகியவற்றின் நிகழ்ச்சிகளின் சாரமும், காலனி விடுமுறைகள், சிங்கப்பூர் கடப்புத் தவணை வட்டிகள், பினங்கு நடப்புத்தவணை வட்டிகள் ஆகிய விவரங்களும் தரப்பட்டிருக்கின்றன. மிக முக்கியமான சில விவரங்களை மட்டில் கீழே எடுத்துத் தந்திருக்கிறோம்:—

### சப்கமிட்டி யமைப்பு.

அ—ச—ஙஉ-உ கூடிய இரண்டாவது மாத நிர்வாக சபைக் கூட்டத்தில் சிறு பண லேவாதேவிக்காரர்களின் மசோதா விஷயமாய் விசாரித்து ரிப்போர்ட் செய்ய எஸ். எஸ் சர்க்காரால் நியமனம் செய்யப் பட்டுள்ள கமிட்டி, சட்ட சபைக்குச் சமர்ப்பித்துள்ள ரிப்போர்ட்டை வாசித்துக் காண்பிக்கப்பட்டது. ரிப்போர்ட்டைப் பற்றி ருசிகாமான விவாதங்கள் நடைபெற்றபின், சென்ற வருடம் விசேட மகாசபையில் நியமிக்கப் பட்டிருக்கும் மணிலெண்டர்ஸ் பில் சப் கமிட்டி கூடி, வேண்டுவன செய்வதுடன், திரு. க. வீ. அழ. ராம. கருப்பஞ் செட்டியாரவர்களின் ராஜிநாமாவால் சப கமிட்டியில் ஏற்பட்டிருக்கும் காலியிடத்திற்கு திரு. சவீ. அழ. ராம. பழனியப்ப செட்டியாரவர்களை நியமிப்பதென்றும் தீர்மானமாயிற்று.

### செய்கோன் செல்வோர்க்குப் பிணை.

கூ—கூ—ஙஉ-உ கூடிய நாலாவது நிர்வாக சபைக் கூட்டத்தில் பாஸ் போர்ட்டு ஜாமீன் பணம் முதலியவையின்றிச் செய்கோன் செல்ல விரும்புவோருக்குப் பிணையாகச் சங்கத்தின் இரு அங்கத்தினர்கள் அதற்கென விருக்கும் பிரத்தியேக ஜாமீன் பாரத்தில் கையெழுத்துச் செய்வதோடு, எல்லா வகுப்பு டிக்கட்டுகளும், டிக்கட்டு ஒன்றுக்கு ரிங்கி இரண்டு வீதம் சங்கத்திற்குக் கட்டணமாக வசூலிப்பதென்றும் தீர்மானிக்கப்பட்டது.

### தீண்டாமை விலக்கும் மகாத்மாவும்

எ-ɔ0-ஙஉ-உ கூடிய எட்டாவது நிர்வாக சபைக் கூட்டத்தில் "தீண்டாதாருக்குத் தனித்தொகுதி வழங்குவதை மறுத்து, உயிர் போம்வரை, உண்ணா விரதம் இருக்க சபதம் செய்த, மகாத்மா காந்தியடிகளின், உறுதிகண்டு, நியாயமும், தர்மமுமான அன்னாரின் மனோபீஷ்டத்தைப் பூர்த்திசெய்து, ஆருயிரைக்காக்க முனைந்தின்று தமது கருமத்தில் வெற்றியடைந்த சர்வ கட்சி இந்தியப்பிரமுகர்கட்கும் சிறப்பாக தீண்டாதார் தலைவர்களுக்கும், பிரிட்டிஷ் பிரதம மந்திரிக்கும் இச்சபை தனது மனமார்ந்த மகிழ்ச்சியையும் நன்றியறிதலையும் தெரிவித்துக் கொள்ள விரும்புகின்றது" என்னும் தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது.

### பணலேவாதேவி மசோதாத் திருத்தங்கள்.

ஆங்கிரஸ சித்திரை கச-உ கூடிய பணலேவாதேவிக் காரர் மசோதா சப்கமிட்டியின் கூட்டத்தில் சங்கக் காரியதரிசி திரு. ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார், ஆனரபில் கொலோனியல் செக்ரட்டரி, அவர்களிடமிருந்து கிடைக்கப் பெற்றுள்ள மணிலெண்டர்ஸ் கமிட்டியின் ரிப்போர்ட்டையும், டிராப்ட்பில்லையும் சபையோருக்கு வாசித்து விளக்கிக் காண்பித்தார்கள்.

நீண்ட விவாதத்திற்குப் பின்னர் கீழ்க்கண்ட திருத்தங்களை, சட்டத்திலமைத்துச் சங்க லாயரின் ஆலோசனைக்கனுப்பி, பின்னர் கலோனியல் செக்ரட்டரிக்கு அனுப்புவதென்று தீர்மானிக்கப்பட்டது:—

"சென்ற வருடத்தில் வில்சன் கமிட்டியாரிடத்தில் 'பொருளாதார நிலை குன்றி வியாபார மந்தம் அதிகரித்திருக்கும் இவ்வேளையில் எங்களின் பழமையான தொழிலைப் பாதிக்கும் எவ்வித நூதனச் சட்டத்தையும் நாங்கள் விரும்பவில்லை' என்று செய்த சிபார்சை மீண்டும் வற்புறுத்திக் கூறக் கமிட்டி விரும்புகின்றது.

"அங்ஙனம் பண லேவாதேவியைக் கட்டுப்படுத்தச் சட்டம் இயற்றுதல் மிக்க இன்றியமையாத அவசியம் என்று அரசாங்கம் நினைப்பின் வில்சன் கமிட்டியார் முன்னர் இந்தக் கமிட்டிக்கு உ-ச-ஙக-ல், எழுதியுள்ள கடிதத்தில் கண்டபடி 'செட்டியார்களின் பெரிய கடைகளை ரிஜிஸ்தர் செய்து கொள்வதற்குப் பதிலாக, ரிஜிஸ்தார் ஆபீசருக்கு, அக்கடைகளின் பங்காளிகளைப் பற்றியும், ஏஜண்டுகளைப்பற்றியும் வருடாந்திர அறிக்கை ஒன்று சமர்ப்பித்தல் நலமென்று கூறியுள்ள சிபார்சை, அரசாங்கத்தாருக்குக் கமிட்டி சிபார்சு செய்ய விரும்புகின்றது.

'நகல் மசோவில் கண்டபடி வட்டிக்கு மேல் வட்டி வாங்குவது கூடாதென்பதைக் கமிட்டி ஒத்துக்கொள்வதுடன் வட்டிக்கு வட்டி விகிதத்துடன், கோட்டுக்கள் எழுதாதிருத்தல், ஆசாமிக்காரர்களை, அறிமுகப் படுத்திவைக்கும் வழியிலோ, அல்லது மற்றும் கடன் வாங்க உதவிசெய்யும் வகையிலோ ஒருவரும் கமிஷன் பெறக் கூடாதென்பதையும், தரகர்களைத் தனிகர்கள் வேலைக்கமர்த்திக் கொள்ளக் கூடாதென்பதையும், கமிட்டி அங்கீகரிக்கின்றது.

"மார்க் கீசு, ஈடு, முதலியவைகளைத் தற்பொழுது ஆண்டுவரும் சட்டங்களைப் பாதிக்கக்கூடிய, எவ்வகைப் புதிய சட்டத்தையும் கமிட்டி விரும்பவில்லை என்று தெரிவித்துக்கொள்ள விரும்புகின்றது.

"புரோநோட்டின் நகல் ஒன்றைக் கடன் வாங்கியவருக்கு, குறிப்பிட்ட ஒரு காலத்திற்குள், அனுப்புதல் கடன் ஒப்பந்தத்தில் ஏற்படும் [illegible] முதலிய அவசியச்செலவுகளுக்கு மணிலெண்டர், கொடுப்பவரை, கேட்கக்கூடாது, புரோநோட்டுகளின் காலவரையை ஒரு வருடமாகக் குறுக்குவது முதலியவற்றிற்கு, கமிட்டி தனது ஆட்சேபத்தை எடுத்துரைக்க விரும்புகின்றது."

### கையெழுத்துப்போடும் விதம்.

கச—ɔ0—ஙஉ தேதி கூடிய இரண்டாவது விசேட மகாசபைக் கூட்டத்தில், "ஒரு சிலர்களாலோ, அல்லது பலர்களாலோ நமது சமூக கூட்டத்தின் அநுமதியன்றியும் நமது சங்க அநுமதியன்றியும் நகரத்தார்களென்றோ, அல்லது நாட்டுக்கோட்டைச் செட்டியார்களென்றோ வெளியாகிற வெளியீடுகளில், நகரத்தார் என்ற சொல் நமது சமூகத்தையும், நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் என்ற சொல் நமது சங்கத்தையும் குறிப்பதால் நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் இன்னார், இன்னார்களென்று கையெழுத்துச் செய்துகொள்ள வேண்டுமென்று நமது அங்கத்தினர்களை கேட்டுக் கொள்வதாகத் தீர்மானிக்கிறது" என்று திரு. ராம. வீர. ராமசாமிச் செட்டியாரவர்களால் பிரரேபிக்கப்பட்டு திருவாளர்கள், சா. சு. சொக்கலிங்கம் செட்டியாரவர்களாலும் பழ. சிக. கருப்பன் செட்டியாரவர்களாலும் ஆமோதிக்கப்பெற்று, திரு. தீ. சொ. தீ. சொ. சொக்கலிங்கம் செட்டியாரவர்களால் ஆட்சேபிக்கப்பெற்று, நீண்ட விவாதத்திற்குப் பின் "நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் இன்னார் இன்னார்களென்று கையெழுத்து செய்துகொள்ளவேண்டு மென்பதற்குப்பதிலாகத்" தமிழில் தனவைசிய நண்பர்களென்றும், ஆங்கிலத்தில் Danavysia Nattukkottai Chettiar Friends) என்றும் கையெழுத்துச் செய்துக் கொள்ள வேண்டு"மென்று அங்கத்தினர்களால் ஏகமனதாகத் தீர்மானிக்கப் பெற்றது.

# பிரபுக்கள் சபையில் இந்திய விவாதம்.

இந்திய அரசியல் சீர்திருத்தசம்பந்தமாக பிரிட்டிஷ் பார்லிமெண்டின் பிரபுக்கள் சபையில் பிப்ரவரி கூ தேதி ஓர் விவாதம் நடைபெற்றது. அதின் விவரம் வருமாறு:—

### ரன்னர் கில்லர்ப் பிரபு.

முன்பு காமன்ஸ் உபதலைவராக விருந்த ரன்னாகில்லர்ப் பிரபு இந்திய அரசியல் சீர்திருத்தங்களின் சம்பந்தமாக அரசாங்கம் அனுசரிக்கப்போகும் முறையைப் பற்றியும், அடுத்தபடியான நடவடிக்கையைப்பற்றியும் பிரபுக்கள் சபையில் விவாதத்தை எழுப்பினர். சீர்திருத்தங்கள் தகுந்த ஆசாரங்களுடன் கூடியவைகளாக விருக்கவேண்டுமென்றும், பார்லிமெண்டு சட்டத்தால் கட்டுப்படுத்தப் பட்டவைகளாக விருக்கக்கூடாதென்றும் அவர் வற்புறுத்தினர். ஆங்கிலோ ஐரிஷ் ஒப்பந்தத்தை உதாரணமாகக் கொள்ளக் கூடாதென்றும், அந்த உதாரணத்தை அனுஸரித்தால் பிற்பாடு ஒப்பந்தத்தில் பார்லிமெண்டு எவ்வித மாறுதல்களையும் செய்யமுடியாதென்றும் அவர் கூறினர். கூட்டுக் கமிட்டியுடன் கலந்தாலோசிப்பதற்காக அழைக்கப்படும் இந்தியப் பிரதிநிதிகள் எந்தக் கொள்கையின்பேரில் தெரிந்தெடுக்கப்படுவார்கள் என்று அவர் கேட்டார்.

### ஸாலிஸ்பரிப் பிரபுவின் எச்சரிக்கை.

ரன்கில்லர்ப் பிரபுவின் சந்தேகங்களை ஸாலிஸ்பரிப் பிரபு ஆதரித்தார். சர்க்கார் என்ன செய்தபோதிலும், கூட்டுக் கமிட்டி என்ன சொன்னபோதிலும், அரசியல் மசோதா முடிவாக எந்த உருவத்தில் தயாரிக்கப் பட்ட போதிலும், அரசியல் அபிவிருத்தி படிப்படியாகப் பல ஆண்டுகளில் நடந்தேற வேண்டுமென்றும், பார்லிமெண்டு நடுவில் ஏற்படும் கஷ்டங்களைத் தீர்க்க வேண்டுமென்றும் அவர் கூறினர். படிப்படியாக நடந்தேறவேண்டிய அம்சங்களை ஏககாலத்தில் தாண்ட முயற்சிப்பது ஆபத்தை விளைவிக்குமென்று அவர் எச்சரித்தார்.

### ரீடிங் பிரபுவின் சமாதானம்.

சர்க்கார் அனுஸரிக்கும் எந்த முறையாலும் பார்லிமெண்டு ஆராய்ச்சிக்குப் பங்கமேற்படு மென்று கூறுவதற்கில்லையென்று ரீடிங் பிரபு கூறினர். சர்வகட்சி மகாநாட்டுப் பிரிட்டிஷ் பிரதிநிதிகளும் ஸர் சாமுவல் ஹோரும் அதிசயிக்கத்தக்கமுறையில் மகாநாட்டு நடவடிக்கைகளை நடத்திவைத்திருப்பதாக அவர் கூறினர். இப்பிரச்சினையைத் தீர்ப்பதற்கு அவர்கள் தங்களுடைய முழுக்கவனத்தையும் செலுத்தி வந்ததாகவும், மிகவும் சமாதான உணர்ச்சியுடனேயே அவர்கள் நடந்து கொண்டதாகவும், ஆனால் ஏகாதிபத்திய நலத்தை யுத்தேசித்து விட்டுக்கொடுக்க முடியாத விஷயங்களில் அவர்கள் திடத்துடனிருந்ததாகவும் அவர் கூறினர். அரசியல் அபிவிருத்தியில் திட்டமாக முன்னேற்ற மேற்படவேண்டுமென்றே ஸர்வகட்சி மகாநாட்டில் பிரஸன்னமாயிருந்த ஒவ்வொருவரும் கோரினர்கள் என்றும், அதை இந்தியர்கள் தாங்கள் கோரும் முறையில் முன்னேற்றமாகக் கருதித் திருப்தியடைவார் என்று நம்புவதாகவும் அவர் கூறினர்.

### பீல் பிரபு.

தீவிர அபிப்பிராயங்கள் கொண்டிருப்பவர்களைக் கூட்டுக்கமிட்டியிலிருந்து விலக்கிவிட வேண்டுமென்று கூறப்பட்ட ஆலோசனையை, பீல் பிரபு கண்டித்தார். திரு. சர்ச்சில், லாயிட் பிரபு போன்றவர்கள் கூட்டு கமிட்டியில் வேலை செய்யாமல் போவது ஒரு துரதிஷ்டமென்று கருதப்பட வேண்டுமென அவர் கூறினர்.

### இர்வின் பிரபு பதில்.

இர்வின் பிரபு சர்க்கார் சார்பாகப் பதிலளித்தார். ஈஸ்டரில் பார்லிமெண்டால் தயாரிக்கப்படும் கூட்டுக்கமிட்டி அரசியல் மசோதாவைத் தயாரிக்காதென்றும் அடுத்த சில வாரங்களுள் சர்க்கார் வெளியிடப்போகும் அறிக்கையி லடங்கியிருக்கும் சர்க்கார் ஆலோசனைகளையே பரிசீலனை செய்யுமென்றும் அவைகளைக்கொண்டு மசோதாத் தயாரிக்கப்படுமென்றும் அவர் கூறினர். விவாதத்தில் எழுப்பப்பட்ட கஷ்டங்களைச் சர்க்கார் உணர்ந்திருக்கிறதென்றும், அவைகளைத் தீர்ப்பதில் மிகவும் கவனமும் ஜாக்கிரதையும் அவசிய மென்பதையும் அரசாங்கத்தார் அறிவார்களென்றும், கூட்டு கமிட்டி நியமனத்துக்கு அனுமதி கோரப்படுகையில் இதைப்பற்றி விவாதிப்பது சௌகரியமாக விருக்குமென்றும் அவர் கூறினர். சர்க்கார் அறிக்கை வெளியாய்போது ஸாலிஸ்பரிப் பிரபுவின் பலகவலைகள் தீர்ந்துவிடுமென்று தாம் நம்புவதாகவும், பிரிட்டன் தனது பொறுப்புகளைச் சரியான முறையில் ஈடேற்றி விடுவதற்காகப் பார்லிமெண்டில் பல தடவை வாக்குறுதிகள் கொடுக்கப்பட்டிருப்பதால் அவைகளை நிறைவேற்றப் போதுமான காப்புகள் செய்து கொள்ளப்படுமென்றும் அவர் கூறினர். பார்லிமெண்டுக் கூட்டுக் கமிட்டி இந்தியப் பிரதிநிதிகளுடன் உண்மையாகவும் உபயோகமான முறையிலும் கலந்தாலோசிக்க வேண்டுமென்றும், அதன் மூலம் பார்லிமெண்டு கவனம் செலுத்தவும் சந்தர்ப்ப மிருக்குமென்றும் இர்வின் பிரபு கூறினர். "பார்லிமெண்டு விதிகளின்படி இந்தியப் பிரதிநிதிகள் கூட்டுக் கமிட்டியில் மெம்பர்களாக விருக்கமுடியாது. மேலும் கூட்டுக் கமிட்டிப் பரிசீலனை முறை கமிட்டியாலேயே நிர்ணயிக்கப்படும். பார்லிமெண்டு மெம்பர்களுடனும் இந்தியப் பிரதிநிதிகளுடனும் பூர்ணமாகக் கலந்தாலோசிக்கக்கூடிய முறையில் கமிட்டியை அமைக்க அரசாங்கத்தார் அனுமதி கோருவார்கள். கூட்டுக் கமிட்டிப் பரிசீலனைக்கு இந்தியப் பிரதிநிதிகளை அழைக்கும் விஷயமாக இந்தியா மந்திரி ஸர் ஸாமுவல் ஹோர் ராஜப் பிரதிநிதியுடன் கலந்தாலோசித்துவருகிறார். இன்னும் முடிவாக ஒன்றும் தீர்மானிக்கப் படவில்லை. பிரதிநிதித்துவம் வாய்ந்த இந்தியர்களை அழைப்பதற்கு முயற்சிகள் செய்யப்படும். இந்தியாவிலுள்ள பற்பல கோஷ்டிகளும் பிரிட்டனிலுள்ள பற்பல கோஷ்டிகளும் பெருவாரியாக ஒன்றுபட்டு ஒப்புக்கொள்ளக்கூடிய ஆலோசனைகளை அரசாங்கத்தார் கூறுவார்கள். இரண்டு முக்கியமான கொள்கைகளுக்கு முரண்பாடில்லாமல் அரசாங்கத்தார் நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ள உத்தேசித்திருக்கிறார்கள். பெருவாரியாக ஒற்றுமை யேற்படவேண்டியது முதல் கொள்கையாகும். பார்லிமெண்டின் முடிவான பொறுப்பு மற்றொருகொள்கையாகும்" என்றும் அவர் தெரிவித்தார். அதன் பிறகு விவாதம் முடிந்தது.

புரொபஸர் ஸி. வி. ராமன் ஓர் பெரிய ஸயின்ஸ் ஆராய்ச்சி நிபுணர் என்பது உலகப் பிரசித்தியான விஷயம். நோபல் பரிசு வாங்கி, இந்தியாவுக்கே பெருங் கௌரவத்தை வாங்கித் தந்த பெருமை வாய்ந்த இந்தியர் இருவரே. அவருள் ஒருவர் டாக்டர் ரபீந்திரநாத டாகூர். இவர் பல வருடங்களுக்கு முன் இலக்கியத்திற்காக நோபல் பரிசு வாங்கினர். ஆனல், தற்கால உலகில், மேனாட்டு நாகரிகத்தில் மனமயங்கிக் கிடப்பவர்கள், முக்கியமாக ஆச்சரியப்பட்டுக் கொண்டிருப்பது, மேனாட்டு ஸயின்ஸ் அபிவிருத்தியைக் கண்டுதான். இத் துறையிலும் இந்தியர் பிறருக்கு இளைத்தவரல்லர் என்பதை நிரூபணம் செய்த பெருமை புரொபஸர் ஸி. வி. ராமனுக்கு உரியதாகும். இவர் பிரயோக ஸயின்ஸ் ஆராய்ச்சியில் மூற்படாததால், பாமர மக்களும் அதிசயிக்கத் தக்க பொருள்களைக் கண்டுபிடித்தாரில்லை. ஆனல், பிரயோக ஸயின்ஸ் (அப்ளைடு ஸயின்ஸ்) துறையிலும், சித்தாந்த ஸயின்ஸ் (தியரிடிகல் ஸயின்ஸ்) ஆராய்ச்சிதான் ஸயின்ஸ் உலகத்தில் பெரிதும் கொண்டாடப் படுவதாகும். சித்தாந்த சயின்ஸ் நிபுணர்கள் தாம் பற்பல பௌதிக உண்மைகளையும் புதிதாகக் கண்டு பிடிக்கிறார்கள். பிரயோகசயின்ஸ் நிபுணர்கள், அவற்றைப் பலகருவிகளுக்கும் பிரயோகிக்கின்றார்கள். நிற்க, புரொபஸர் ஸி வி. ராமன் கண்டு பிடித்த அத்தகைய அதிசய உண்மை யாது என்பது நம்மில் அநேகருக்குத் தெரியாது. அதை விளங்கிக் கொள்ளுவதும் சாமான்ய ஜனங்களுக்குக் கஷ்டமானதே. டாக்டர் மேகனாத் ஸாஹா என்பவர் "இந்தியா அண் தி வொர்ல்ட்" என்ற பத்திரிகையில், ராமன் கண்டு பிடித்த சயின்ஸ் உண்மைகளைப்பற்றிச் சுருக்கமாக எழுதியிருக்கிறார். அதன் சாரமான பகுதி வருமாறு:—

# ராமன் கண்டுபிடித்த தென்ன?

## "கலவை யொளிவீச்சு அதிசய விளக்கம்."

"ராமன் தமது வாழ்க்கையின் மிகச் சிறந்த காரியத்தைச் செய்தது ௧௯௨௮-ம் ஆண்டில்தான். அப்பொழுது அவர் 'கலவையொளி வீச்சு' (Combination Scattering) என்பதைக் கண்டுபிடித்தார். இப்பொழுது அது 'ராமன் விளைவு' (Raman Effect) என்ற மிகப் பொருத்தமான பெயரால் அழைக்கப்படுகின்றது. இது அதிர்ஷ்டமடித்ததால் திடீரெனக் கண்டு பிடிக்கப்பட்டு விட்ட வொன்றல்ல. இது பலவருடங்களாக அவர் தொடர்ந்து கடினமாக உழைத்த உழைப்பின் பலனே யாகும். வானத்தினதும் கடலினதும் நீல நிறம் கவிகளையும் ஆசிரியர்களையும் எப்பொழுதும் மனங்கவர்ந்து வந்திருக்கின்றது. ஆனல், அதற்கு ஸயின்ஸ் ரீதியான காரணத்தை முதலில் விளக்கியவர் ரேலீப்பிரபு (Lord Rayleigh) அவர்கள் தாம். டிண்டால் (Trindall) அவர்கள் செய்த பரிட்சைகள் அதனை ஆதரித்தன. நமது பூமியைச் சூழ்ந்துள்ள 'ஆட்மஸ்பியர்' (Atmosphere) என்ற ஆகாயத்திலுள்ள அணுக்கள் (Molecules) வானின்று வரும் ஒளியலைகளைச் சிதைக்கின்றன. இதனல் தான், வானமும் கடலும் நீலமாய்த் தோன்றுகின்றன என்று ரேலீப் பிரபு விளக்கினர். சிவப்பு ஒளியை விட நீல ஒளியே அதிகமாகப் பக்கங்களில் வீசுகின்றதாகத் தோன்றுகின்றது. இதனல் தான் கடல் நீலநிறமாகத் தோன்றுகின்றது.

"முதல் ரேலீப் பிரபுவின் குமாரரும் தற்பொழுதைய ரேலீப்பிரபுமான கனம் டி. ஸ்டிரட் அவர்கள் தம் தந்தையின் சித்தாந்தங்கள் நிலைக்குமா என்பதைச் சோதித்துப் பார்ப்பதற்காக, ௧௫ ஆண்டுகளுக்கு முன் சிலபரிட்சைகள் செய்தார். இவ்விஷயத்தில் ராமனுக்கு உண்டான சிரத்தை, இப்பரிட்சைகளால் எழுந்ததாகக் காணப் படுகின்றது. வெவ்வேறு மாதிரியான அணுக்களால் ஒளி சிதைத்துப் பரப்பப்படுவதைச் சோதனைகளின் மூலமாக ஆராய்வதற்காக, ராமன் மிக நுட்பமான ஓர் கருவியைச் செய்து முடித்தார். தமது பற்பல மாணவர்களும் ஒத்துழைப்புடன், இவ்விஷயத்தில் நூற்றுக் கணக்கான பரிட்சைகளை அவர் செய்தார். இந்த ஆராய்ச்சிகளைச் செய்து கொண்டிருக்குங்கால், இடையே ஒரு புதிய வகையான அனுபவம் தோன்றக் கொடுத்தது. அது என்னவென்றால், சட பதார்த்தங்களால் (Matter) ஒளி சிதைத்து வீசப்பெறும் பொழுது, ஒளி தனது நிறத்தில் மாறுதல் எய்துகின்றது என்பதுதான். நிகழும் சங்கதி பின் கூறப்படுவதுதான். சட பதார்த்தம் தீயினலும் அதுபோன்ற வேறெச்சக்தியின் காரியத்தினலும் கிளர்ச்சியடைகின்றது. அத்தகையசட பதார்த்தத்தில் ஒளி விழும்பொழுது, எந்த மின்சார அதிர்ச்சிகளால் (Electro-magnetic Vibrations) ஒளி ஆக்கப்பட்டிருக்கின்றதோ அந்த அதிர்ச்சிகள், சடபதார்த்தத்தின் அதிர்ச்சிகளில் பிணைப்புண்டு விடுகின்றன. மறுபடியும் அப்பதார்த்தத்தினின்றும் ஒளி வெளியே வரும்பொழுது ஆழ்ந்த மாற்றத்துடனே வெளி வருகின்றது. ஆனல், வெண்மையான ஒளியை உபயோகப்படுத்தினல், இந்த மாறுதலைக் கண்டுபிடிக்க முடியாது. ஏனெனில், வெண்மையொளி, அநேக ஒளிகளின் கூட்டேயாகும்; அதனல் மாறுதல் எய்திய ஒளிகள், பற்பல ஒளித்திரளுக்கு நடுவே மறைந்து போகின்றது. ஆதலால், ஒரே ஒரு நிற ஒளியையே உபயோகிக்க வேண்டும்; மாறுதலெய்திய ஒளியை அதன் பற்பல நிறக் கதிர்களையும் பிரித்து வீசக்கூட 'ஸ்பெக்டிராஸ்கோப்' (Spectroscope) ஸ்படிக திருஷ்டிக் கருவி) என்ற கருவியால் ஆராயவேண்டும். இவ்விஷயத்தில் மிக முக்கியமான பரிட்சை ௧௯௨௮-ம் ஆண்டில் ராமன், கிருஷ்ணன் ஆகிய இருவராலும் செய்யப் பெற்று, உடனே பயனளித்தது.

"சயின்ஸ் உலகத்தில், இந்த நூதன விஷயம் கண்டு பிடிக்கப் பட்டதால் ஏற்பட்ட பயன் ஏராளமானதாகும். இது ஒரு புதிய உண்மையை வெளிப்படுத்தியது என்பது மாத்திரமல்ல; சட பதார்த்தங்களின் குணநிசயங்களை (Properties) ஆராய, ஒரு புதிய வழியையும் இது திறந்து விட்டது. பெர்லினில் உள்ள புரொபஸர் பி. பிரிங்ஷீம் என்பவரே முதன் முதலாக இதன் முக்கியத்துவத்தை அங்கீகரித்தார். அவர் இந்த விஷயம் கண்டு பிடிக்கப்பட்ட விவரத்தைப் பற்றி, ஜெர்மன் பத்திரிகையான "நேசர் விஸ்ஸென் ஷாப்ட்" என்ற பத்திரிகையில் எழுதியதுடன், அணு ஆராய்ச்சி விஷயத்தில் இதன் முக்கியத்தைப் பற்றிக் கவனிக்க வேண்டு மெனக் கூறினர். அது முதல், இந்த விஷயத்தில் ஸயின்ஸ் நிபுணருக்கு ஏற்பட்ட சிரத்தை குறையாமலே இருக்கின்றது; சட சாஸ்திரம் (Physics) ரசாயன சாஸ்திரம் (Chemistry) ஆகியவை சம்பந்தமான ஸயின்ஸ் பத்திரிகைகளில் "ராமன் விளைவு" பற்றிய ஆராய்ச்சிகள் சாவகாசமான அம்சங்களாகி விட்டன. இந்த ஆராய்ச்சிகளிற் பெரும் பாகம், புரொபஸர் ராமன் அவர்களின் சொந்த ஆராய்ச்சிச்சாலை (Laboratory) யினின்றுமே வெளிப் போந்தது. ஸயின்ஸுக்கு இவர் செய்துள பெரும் சேவைகள், ௧௯௩௦-ம் ஆண்டு அளிக்கப் பட்ட நோபல் பரிசால் அங்கீகரிக்கப் பட்டன. கலைச்சுவையற்ற மந்த புத்தியுடைய இந்திய அரசாங்கத்தார் கூட, தங்கள் பாராட்டுதலைத் தெரிவிக்குமாறு அவருக்கு ௧௯௨௯-ம் ஆண்டில் ஸர் பட்டம் அளித்தது அதிசயமாகும். சர்க்கார் அங்கீகாரத்துக்குட்பட்ட மாதிரியான காரியங்களைப் புரிந்த அரசியல் வாதிகட்கும், அதிகார வர்க்கத்தவர்க்கும் மாத்திரமே இது வழக்கமாகக் கொடுக்கப் பட்டு வரும் பட்டமாகும்.



## தனவைசியரின் முன்னேற்றம்.

### ஓர் இளைஞர் வேண்டுகோள்.

ஸிலோன் பெட்டையாவிலிருந்து "தனவைசிய வாலிபன் அழ. சித. வீரப்பன்" என்று கையெழுத்திட்டு ஒருவர் எழுதுவது வருமாறு:—

அறிவிற் சிறந்த பெரியார்களே! நம் தனவைசிய மக்கள் பழைய வழக்கம் வழக்க மென்று நடத்திவரும் வட்டித் தொழிலுக்குக் கஷ்டம் வந்துவிட்ட தென்பது நன்கு தெரிந்த விஷயம். இலங்கையிலும் மலாய் நாடுகளிலும் வட்டித்தொழிலுக்கு ஒவ்வொரு சட்டங்களாகப் புதிது புதிதாகத் தோன்றுவதையும் ஆங்காங்கு உள்ள சங்கங்களின் மூலம் வேண்டுவன செய்துவருவதையும் நாம் பத்திரிகைகளின் மூலமாகப் படித்து வருகிறோம். விளை பொருள்களின் விலை வீழ்ச்சியினல் தாமரை இலையில் தத்தளித்துக் கொண்டிருக்கும் தண்ணீரைப் போன்று நாளுக்கு நாள் தேசங்கள் தோறும் கீழ்நோக்கிக் கொண்டிருக்கும் இந்நாளில் சட்டங்களும் புதிது புதிதாகத் தோன்றினல் நாம் கொடுத்த பணங்களை எப்படி எதிர்ப்பார்ப்பது? வட்டித் தொழிலுக்குப் பெரும் ஆனி ஏற்பட்டு விட்டதால் காலத்துக் கேற்றவாறு பழையன கழிதலும் புதியன புகுதலும் என்ற மூதுரைப்படி நம் தனவைசிய மக்கள் பல துறைகளிலும் ஈடுபட்டு வந்தால்தான் முன்னேற்ற மடையலாம். தனவைசியர்களில் சிலர் வக்கீல் வேலைக்கும் அட்வகேட் வேலைக்கும் வந்திருப்பது குறிப்பிடத்தக்கது. சமீபத்தில் காரைக்குடி ஷண்முகவிலாஸ் தியேட்டரில் நடந்த "வள்ளி திருமணம்" நாடகத்தில் காரைக்குடி தனவைசியர்களில் முதன் முதலாக சுப்பிரமணியராக நடித்துக் கண்பித்த அன்பர் எஸ். பி. வீரப்பா அவர்களைப் போன்று நம் தனவைசியர்கள் ஒவ்வொரு தொழிலிலும் ஈடுபட்டு முன்னேற்றம் அடைய வேண்டு மென்பது சிறியேனுடைய வேண்டுகோள். எல்லாவற்றிற்கும் ஜாதிப் பழக்க வழக்கங்களையே கூறிக்கொண்டிராமல், தொழில் கருதிப் புதிய முறைகளில் ஈடுபடுமாறு இறைவனை வேண்டிக் கொள்ளுகிறேன்.

டில்லியில் ஓர் ஆடம்பர போக ஓட்டல் கட்டும் முயற்சியில் வைசிராய் வில்லிங்டன் மனைவியார் சிரத்தைகொண் டிருக்கிறார், இதற்கு நாலு மாடிகள் வைக்கப்படும்; ௩௦௦ ஜனங்களுக்கு இதில் வசதி யிருக்கும்.





## வில்லிங்டன் விலகல்.

### சீக்கிரம் நடக்குமாம்.

### அசம்பிளி வதந்திகள்.

இந்திய அரசியல் பிரச்சினை விஷயத்தில் அரசாங்கத்தார் சற்பொழுது நடந்து கொள்ள வேண்டிய முறை குறித்து, இந்தியா மந்திரி ஸர் ஸாமுவல் ஹோருக்கும் வைசிராய் வில்லிங்டன் பிரபுவுக்கும் அபிப்பிராய வேற்றுமைகள் ஏற்பட்டிருப்பதாகப் பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன. என்றாலும், இதெல்லாம் வெளிவராத அரசாங்க ரகசியமாகும். இப்பொழுது "பீபிள்" பத்திரிகையின் டில்லி நிருபர் பின்வருமாறு எழுதுகிறார்:—

இந்தியச் சட்டசபை யுறுப்பினர்கட்குள்ளே, வில்லிங்டன் பிரபு கூடிய சீக்கிரத்தில் இந்தியாவை விட்டுப் போய்விடுவார் என்ற வதந்திகள் உலாவுகின்றன. இதற்கு இரண்டு காரணங்கள் சொல்லப்படுகின்றன, முதலாவதாக, வைசிராய் ஓய்வெடுத்துக்கொள்ள ஆசைப்படுகிறார்; அதோடு, புதிய அரசியல் திட்டத்தை, தம்மைவிட அதிக உடலூக்கமும் மனவலிமையும்பெற்ற ஒருவரே துவக்கிவைத்து வழிகாட்டி நடத்திச் செல்லவேண்டும் என்பது அவர் விருப்பம். இரண்டாவதாக, அவர் அடக்குமுறை நிர்வாகத்தில் சம்பந்தப்பட்டிருப்பதால், புதிய அரசியல் சீர்திருத்தச் சட்டத்தை நடத்தப்போகும் வருங்கால இந்தியத் தலைவர்களிடம் அவசியமான நம்பிக்கையை அவர் பெற முடியாது. முக்கியமாக, மகாத்மா காந்திக்கும் அவருக்கும் அபிப்பிராய வேற்றுமைகள் உண்டாயிருக்கின்றன. மகாத்மாவை அவர் பலமாக எதிர்க்கிறார். இந்த எதிர்ப்பை அவர் எந்த நிலைமைகளிலும் மாற்றிக்கொள்ளத் தயாராயில்லை. இவற்றால், தம் ஸ்தானத்திற்கு வேறொருவரைக் கண்டு பிடிக்கும்படி இந்தியா மந்திரியை அவர் வேண்டிக் கொள்ளுவது அவசியமாகி விடலாம். எவ்வாறாயினும் சரி; தமது உத்தியோக காலம் பூராவும் வில்லிங்டன் பிரபு இந்தியாவில் தங்குவது சந்தேகமே.

### ஆலயப் பிரவேச விஷயம்.

ஆலயப் பிரவேச விஷயம் அநிச்சயமானதாயிருக்கிறது. இந்த விஷயத்தைத் தட்டிக் கழிக்க அரசாங்கம் விரும்புகின்றது; பண்டித மாளவியாவின் "சுத்தி"ச் சடங்குதான் உண்மையான பரிகார மெனக்காட்ட முயல்கின்றது. திரு. ரங்க ஐயர் மசோதாக்களுக்குப் பெரும்பாலார் ஆதரவு இருக்கின்றது. மசோதாக்களின் கதி அரசாங்கத்தின் இஷ்டத்தைச் சார்ந்ததா யிருக்கிறது. இந்தியச் சட்டசபையில், அவற்றைப் பைசல் செய்ய எடுத்துக் கொள்ளப் பட்டிருக்கும் முறையில், இந்தவிஷயத்தை இறுதியாக முடிவு செய்ய இந்தியா குறைந்த பட்சம் இரண்டு வருடங்கள் காத்துக் கொண்டிருக்க வேண்டியதுதான் என்று நிச்சயமாகக் கூறலாம். இரண்டு வருடங்களுக்குப் பிறகோ, அதைப் புதிய இந்தியச் சட்ட சபையின் கைக்கு விட்டு விடலாம்! வெளியிலிருந்த வண்ணம் திரு. ஸி. ராஜகோபாலாச்சாரியாரும் திரு. ஜி. டி. பிர்லாவும் தங்களாலான முயற்சிகளை யெல்லாம் செய்து கொண்டிருக்கிறார்கள். ஆனல் இந்தியச் சட்டச் சபைக் கோஷ்டிகளுடன் அவர்கள் சரியான சம்பந்தம் வைத்துக் கொண்டிருக்கின்றார்கள். தங்கள் நோக்கத்தைத் தோற்கடிக்கக் கூடிய குறுக்கு விசைகளை அவர்கள் அறியார்கள். சர்க்கார் இந்த மசோதாக்களைப்பற்றிக் கவலைப்படவில்லை. மகாத்மா சும்மா அமைந்து கிடப்பாரா என்பதை அறிவதில்தான் அவர்களுக்குக் கவலை.

### குரங்குகளுக்குப் புதுங்கி உத்தியோகம்.

சியாம் தேசத்தில், பாங்கிகளில் குரங்குகளுக்கு ஓர் உத்தியோகம் கொடுக்கப் பட்டிருக்கிறதாம். பாங்கியில் செலுத்தப் படும் நாணயங்களில் பதியும் அவற்றின் பற்குறிகள், நாணயம் நல்லதா கள்ளமானதா என்பதைக் காட்டுகின்றனவாம்.

## வரப்போகும் அறிக்கை.

### இரண்டர்த்தம் தருவதாயிருக்குமாம்.

### மந்திரிகள் பொறுப்பு கேலிக் கூத்தே.

பிரிட்டிஷ் அரசாங்கத்தார் கூடிய சீக்கிரம் இந்தியச் சீர்திருத்த சம்பந்தமாகப் பார்லிமெண்டுசபைகள் விவாதிப்பதற்காகத் தங்கள் சிபார்சுகளடங்கிய வெள்ளைக் கடித அறிக்கை யொன்றை வெளியிடப் போவதாகச் சொல்லப்படுகின்றது. இந்த அறிக்கை எப்படிப்பட்டதாயிருக்கும் என்பதைக் கண்பர்களுக்கு அறிய விருப்பமிருக்கும். எனவே, இது எத்தகையதாயிருக்கும் என்பது குறித்து, "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" வெளியிட்டிருக்கு மோர் விவரத்தைக் கீழே தந்திருக்கிறோம்:—

பொது ஜனங்களுக்கு ரகசியத்தைத் தெரிவிக்க அரசாங்கம் தீர்மானிக்கும் வகையில், அவ்வறிக்கையின் உள் விவரங்கள் மர்மமாகவேயிருந்து வரும். ஆனல், அவ்வறிக்கையின் நகல், தெளிவில்லாமலும் இழுத்த இழுப்புக்கு வரக்கூடியதாகவும் உள்ள வார்த்தைகளால் தயாரிக்கப் பட்டிருப்பதாக நான் அறிகிறேன். ஏறக்குறைய அதன் ஒவ்வொரு வாக்கியமும் இரண்டர்த்தம் செய்யக்கூடியதாயிருப்பதாகத் தெரிகிறது. அதற்குத் தாராளமான அர்த்தத்தைச் செய்தல், மிக அமிதவாதம் செய்து கொண்டிருக்கும் காங்கிரஸ் அரசியல் வாதிக்கும் கூடத் திருப்தி தருவதாயிருக்குமென்றும், குறுகிய சாமர்த்தியமான அர்த்தத்தை அதே வாக்கியங்களுக்குச் செய்தால் மந்திரிகள் பொறுப்பு என்பதை அது கேலிக் கூத்தாகச் செய்து விடு மென்றும் சொல்லப்படுகின்றது.

நான் கூறுவதை விளக்க ஒரே ஒரு உதாரணம் மாத்திரம் தருகிறேன். மிக முக்கியமான ஐ. ஸி. எஸ். உத்தியோகஸ்தர் போன்ற உயர்தர உத்தியோகஸ்தர் சம்பந்தமான பாதுகாப்புகளைப் பற்றி, ஓர் ஏற்பாடு செய்ய உத்தேசிக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. அவரவர் பதவிக்கேற்றவாறு அவ்வுத்தியோகஸ்தர் நேரே கவர்னரிடமோ கவர்னர் ஜெனரலிடமோ சம்பந்தம் வைத்துக் கொள்ளலாம். பொறுப்பளிக்கப்பட்டிருக்கும் மந்திரிக்கும் அந்த உத்தியோகஸ்தருக்கும் அபிப்பிராய வேற்றுமை ஏற்படுமானல், கவர்னர் அல்லது கவர்னர் ஜெனரலின் சம்மதமின்றி, அவரை ஒரு பதவியிலிருந்து இன்னோர் பதவிக்கு மாற்ற மந்திரிக்கு அதிகாரம் கிடையாது.

இந்தப்பாதுகாப்பு மனம்போனபடி மந்திரிகள் நடந்து கொள்ளுவதினின்றும் அவ்வுத்தியோகஸ்தர்களைப் பாதுகாப்பதற்காகவே உத்தேசிக்கப்பட்டிருக்கிறது என்பதையுணர்ந்து, இந்தவிதிக்குத் தாராளமானவியாக்கியானத்தை கவர்னர்செய்துகொள்ளுவாரானல், எவ்விதத் தொல்லையுமிராது. ஆனல், மந்திரியின் கொள்கையை அவர் நோக்கம் நிறைவேறாது தடுக்கும் முறையில் பிரயோகம் செய்து, அவர் கொள்கையை அத்தகைய ஒரு உத்தியோகஸ்தர் வேண்டுமென்றே தோற்கடிக்க முயன்றால், அவ்வுத்தியோகஸ்தர்மீது ஒழுங்குத்தவற்றைக் கண்டிக்கும் நடவடிக்கையை எடுத்துக்கொள்ளும் விஷயத்தில் மந்திரிக்கும் கவர்னருக்கும் அபிப்பிராய வேற்றுமை ஏற்படலாம். அவ்வாறு அவர்கள் மாறுபடுவார்களானல், அப்பொழுது பொறுப்புவாய்ந்த மந்திரியின் நிலைமை பொம்மலாட்டப் பொம்மையினுடையதைப் போன்றதேயாகிவிடும்; உயர்தர உத்தியோகஸ்தர்கள், கவர்னரைத் தங்கள் கையில் வைத்துக்கொண்டு, தாங்களே அரசாங்கத்தை நடத்திக்கொண்டிருப்பார்கள். மத்திய அரசாங்கம் மாகாண அரசாங்கங்கள் ஆகிய இரண்டிலும் இவ்வாறே நிகழும்.

மற்றவை சம்பந்தப்பட்ட மட்டில், மூன்றாம் வட்டமேஜை நிகழ்ச்சிகளின் சர்க்கார் அறிக்கையில் சொல்லப்பட்டிருக்கும் விஷயங்களை ஏறக்குறைய அனுசரித்தே, வெள்ளைக் கடித அறிக்கையின் நகல் தயாரிக்கப்படுவதாக நான் அறிகிறேன்.





## தென் இந்தியா ரயில்வே Co'

(இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது.)

விஸ்வநாதம் அண் கம்பெனியாரின்

திருச்சியிலிருந்து வட இந்தியாவிற்குச் சென்றுவரும் ஸ்பெஷல் ரயில்.

திருச்சினாப்பள்ளி சின்னக் கடைத்தெரு ௨௧. வீட்டிலிருக்கும் விஸ்வநாதன் அண் கம்பெனியார் திருச்சினாப்பள்ளியிலிருந்து வட இந்தியாவிற்குச் சென்று திரும்ப ஓர் ஸ்பெஷல் ரயில் வண்டிவிடவும் ஏற்பாடு செய்யவும் அதிகாரம்பெற்றுள்ளார் என்பதைப் பொதுஜனங்களுக்கு இதனல் அறிவிக்கப்படுகிறது. இந்த ஸ்பெஷல் ரயில் திருச்சியிலிருந்து ௧௯௩௩ மார்ச்சு ௨௫-ம் தேதி புறப்பட்டு ௧௯௩௩ மே ௨௮-ம் தேதி திரும்பவந்து சேரும்.

முழுவிபரங்களுக்கு ஷை கம்பெனியாருக்கு விண்ணப்பித்துக் கொள்ளவும்.

## கப்பல்

### போகும் கப்பல்கள்.

நாகப்பட்டினத்திலிருந்து பினங்கு, போர்ட்டு ஸ்வெட்னம் (கிள்ளான்), சிங்கப்பூர் ஆகிய விடங்களுக்குப் போகும் கப்பல்கள் வருமாறு:—

| | ஆங்கிலத்தேதி. | தமிழ்த்தேதி. |
|---|---|---|
| ரோணா | 18-2-33 | மாசி ௭ |
| ரஜூலா | 4-3-33 | மாசி ௨௦ |
| ரோணா | 18-3-33 | பங்குனி ௫ |

### வரும் கப்பல்கள்.

மலாய் நாட்டிலிருந்து நேரே நாகப்பட்டினம் வரும் கப்பல்கள் வருமாறு:—

| | ஆங்கிலத் தேதி. | தமிழ்த் தேதி |
|---|---|---|
| ரஜூலா | 22-2-33 | மாசி ௧௧ |
| ரோணா | 8-2-33 | மாசி ௨௭ |
| ரஜூலா | 22-3-33 | பங்குனி ௯ |

[குறிப்பு:—இது மதுரைக் கம்பெனியின் நாகை ஏஜண்டுகள் நமக்கு அறிவித்த விவரமாகும்.]

மன்னவர் தமக்கும் அஞ்சேன்
மாண்பெரும் நாட்டிற் காக
என்னுயிர் தனையும் ஈவேன்
எதற்குமியான் யாண்டும் அஞ்சேன்
பன்னரும் பார தத்தாய்
பண்டைவாழ் வெய்தப் பாரில்
ஒன்னலர்க் கஞ்சா நல்ல
ஊழியம் தலைமேற் கொண்டேன்.

ஊழியன் காரைக்குடி
ஆங்கிரஸ-ஹு மாசி-மீ ௪-௨

## தீண்டாமையும் — வகுப்புப் பிரிவும்.

காந்தியடிகளின் கட்டுரை பெரிதும் கொண்டு தீண்டாமை ஒழிப்பையே குறிக்கோளாக "ஹரிஜனம்" என்ற பெயரோடு வெளியிடப்படும் வாரப் பத்திரிகையின் முதல் இதழ் இக்கிழமை வெளி வந்திருக்கிறது. அப் பத்திரிகைக்கு டாக்டர் அம்பேத்கார் அனுப்பிய செய்தியில் வகுப்புப் பிரிவே தீண்டாமைக்குக் காரணம் என்றும், வகுப்பு வேற்றுமை முறையை ஒழித்தால்தான் தீண்டாமை முறை ஒழியும் என்றும் குறிப்பிட்டுள்ளார். அதை மறுத்து, காந்தியடிகள் வகுப்புப் பிரிவிற்கும் தீண்டாமை யொழிப்பிற்கும் தொடர்பில்லை யென்றும் வகுப்புப் பிரிவு இருந்தே தீரவேண்டு மென்றும், ஆனல் வகுப்பில் உயர்வு தாழ்வு கொள்ளப்படலாகா தென்றும் வகுப்பு உயர்வு தாழ்வு உணர்ச்சியை நீக்கினல் தீண்டாமை போய்விடும் எனவும் கூறுகிறார். இது கண்டதும் தீண்டாமை போக்க உழைக்குங் கூட்டத் துள்ளேயே மறுப்பு, எதிர் மறுப்புக்கள் கிளம்பிவிட்டதில் வியப்பு ஒன்றும் இல்லை.

காந்தியடிகள் வகுப்புப் பிரிவு இருந்து தீரவேண்டியதுதான் என எப்பொழுதுமே இயம்பி வருகிறார். இதில் நாம் காந்தியடிகளோடு மாறுபட்ட கருத்துடையோம் என்பதை "ஊழியன்" அன்பர்கள் நன்கு அறிவார்கள். தமது பழய கருத்தையே இப்பொருளில் காந்தியடிகள் இன்னும் வலியுறுத்தி வருகிறார். நமது பழய கருத்தை—இப்பொருளில் அடிகள் கருத்திற்கு மாறான கருத்தை—பிறப்பினுல் வகுப்பு இருத்தல் ஆகாது என்ற கருத்தை மாற்றிக்கொள்ள வேண்டிய அவசியம் எதையும் நாம் கண்டோமில்லை. ஆனல், இக்கருத்து வேறுபாடுபற்றி, காந்தியடிகட்கு உள்ளத்தில் அளித்த இடத்தைச் சிறிதும் நாம் மாற்றியமைக்கப் போவதில்லை.

எல்லாச் சீர்திருத்தப் பொருள்களினும் பெரிதும் திருந்திய புதிய உள்ளத்தோடு தீமையை எதிர்த்து நிற்பதில் இணையற்ற உலகப் பெரியார், இப்பொருளினும் தங்கருத்தை மாற்றிக் கொள்ளும் சந்தர்ப்பம் விரைவில் வரவேண்டும்;வந்தேதீரும்என்று நம்பலாம். இதுகொண்டு கொடுமைவாய்ந்த தங்கள் வகுப்பு உயர்வு தாழ்வுத் தீய கொள்கைகளையெல்லாம் காந்தியடிகள் உடன்படுகிறார் என வர்ணாச்சிரமிகள் என்போர் எவரும் மயங்கவேண்டுவதில்லை. அடிகள்கூறும் ஜாதிக்கொள்கை வேறு. அதை அடிகளே அடிக்கடி கூறிக்கொள்கிறார். வகுப்பில் உயர்வு இழிவுகொள்ளல் தகாதென அவர் கூறுகிறார். பிராமணன் உயர்ந்தவன் என்றும் மற்றவன் தாழ்ந்தவன் என்றும் படிப்படியாகப் பகரப்படும் கொள்கையை அடிகள் உடன்படவில்லை. "பிராமணன் முதலிய வகுப்புக்கள் வேண்டும். ஆனல் பிராமணனும் மற்றை வகுப்பானும் தகுதியில் ஒரேபடி." என்று அவர் இயம்புகிறார். அதுபற்றிப் பெருவாரியாக விரிவுரை செய்கிறார். தாம் கருதும் அத்தகைய நிலைமை இப்போது வகுப்பு முறையில் இல்லையென்பதையும் அடிகள் மறுக்கவில்லை. தம் கருத்தின்வழி வகுப்புமுறையைச் சீராக்க முயலல் வேண்டும் என்பது அடிகள் கருத்து. அதன் உள்வழிகளையெல்லாம் தேவைப்படுங்கால் ஆராயலாம்.

முக்கியமாக காந்தியடிகட்கும் நமக்கும் உள்ள வேறுபாட்டைச் சுருக்கிக் கூறுவோம். அடிகள் பிறப்புப்படியே வகுப்பு இருக்கவேண்டுமென்று கூறுகிறார். நாம் அதை உடன்படவில்லை. சிறப்புக்கேற்ற வகுப்பு வேண்டும் என்று சொன்னல் அதில் ஆராய்ச்சிக்குரிய பொருளிருக்கிறது. பிறப்புக் கொண்டு வகுப்பு வகுக்குங் கொள்கைக்குப் பொருளில்லை.

காந்தியடிகள் வகுப்புக்கு முக்கியப் பாதுகாப்பாக ஏற்படுத்தப்பட்ட அரண்களையெல்லாம் உடைத்தெறிகிறார். ஆனல் பேருக்கு வகுப்பு மட்டும் இருக்கவேண்டும் என்பது வியப்பாகவே இருக்கிறது. ஒரு வகுப்பான் என்பவன், இன்னொரு வகுப்பாள் என்பவளை மணப்பதையும் எல்லா வகுப்பாரும் கலந்து உண்பதையும் காந்தியடிகள் உடன்படுகிறார். பிறப்பினுல் வகுப்புவேண்டும் என்ற கொள்கையும் கலப்புணவு கலப்பு மணத்தை உடன்படும் கொள்கையும் ஒருங்கே இருப்பது ஆச்சரியம் என்று கருத இடமில்லாமலில்லை. இன்னோரன்ன முன்னேற்றக் கொள்கைகளில் தலைசிறந்து விளங்கும் காந்தியடிகள், வகுப்புச் சனியையும் தொலைக்க விரைவில் முன்வருவார் என்று நாம் நம்புதல் இயற்கையே.

தீண்டாமையைப் போக்குதற்கு வகுப்புமுறையை ஒழிக்கவேண்டுவது அவசியம் இல்லையென அடிகள் கூறுகிறார். அந்த வாதத்தை நாம் ஒப்புக்கொள்ளுகிறோம். வகுப்புமுறையை வைத்துக் கொண்டே தீண்டாமையை ஒழிக்க முடியாதென்பது இல்லை. ஆனலும் நாட்டைப் பாழாக்கும் பொருளிலா வகுப்புமுறை ஏன் இருக்கவேண்டும்? வகுப்புமுறைக்கும் தீண்டாமைக்கும் உள்ள வேறுபாட்டை விளக்குவதாகக் கொண்டு அடிகள் கூறும் உதாரணம் பொருத்தமாக வில்லையென்பதை எடுத்துக் காட்டக் கடமைப்பட்டிருக்கிறோம்.

> "தேகத்தில் அவலக்ஷணமான சில அவயவங்கள் வளர்ந்துவிட்டதற்காகத் தேகத்தையே நாசமாக்கி விடுவது முறையாகுமா? நாம் இட்ட பயிரில் களை தோன்றி விட்டால் அதற்காகப் பயிரையே அழித்துவிடுவது நியாயமா"

என அடிகள் கேட்கிறார். ஆம்! உடம்பில், அருவருப்புக்குரிய உறுப்புக்கள் தோன்றினல் உடம்பை அழித்தல் ஆகாது; அவ் உறுப்புக்களைத் தான் போக்குதல் வேண்டும்; பயிரில், களை தோன்றினல் களையைப் பிடுங்குதல் வேண்டுமே யன்றிப் பயிரைத் தொலைத்தல் ஆகாதுதான். உடம்பு எது? அதில் முளைத்த இழுக்குள்ள அங்கம் எது? பயிர் எது? களை எது? என்பதே கேள்வி. அடிகள் வகுப்பு உடம்பு என்றும், தீண்டாமை வேண்டா உறுப்பு என்றும், வகுப்பு பயிர் எனவும், தீண்டாமை களை எனவும் கொள்கின்றார். ஏன் அப்படிக் கொள்ளல் வேண்டும்? உடம்பு மனித வர்க்கம் என்றும், அவ் உடம்பில் தோன்றிய புண்கள் வகுப்பு முறையும் அதினின்றும் கிளைத்தெழுந்த தீண்டாமையும் என்றும், பயிர் மக்கட் பிரிவு எனவும், அப்பயிரைவளரவொட்டாமல் தடுக்கத் தோன்றிய களை [illegible] புக்களும் அவைகளடியாகத் தோன்றிய தீண்டாமையும் எனவும் கொள்ளுதலே சாலப் பொருந்தும்.

இந்நாள் தீண்டாமையும் பிறப்புக் காரணமாகவே யன்றோ கொள்ளப்படுகின்றது! பிறப்புக் காரணமாகக் கூறப்படும் வேண்டாத எல்லாவற்றையும் சேர்த்துத் தொலைத்தலே நன்று. ஆனல், இதில் கருத்து வேறுபாடு இருப்பதால் அவரவர் கருத்தின் வழிதான் ஒழுக முடியும். இரண்டு சாராரும் ஒருவரை ஒருவர் மாற்ற முயற்சிக்கலாம். நாளடைவில் யார் பலம் பெறுகிறார்க ளென்பதைப் பார்க்கலாம். இப்போது வகுப்பு முறையில் கருத்து வேறுபாடு உள்ளாரும் தீண்டாமை ஒழிப்பில் ஒன்றிய கருத்துடையா ராகலின் அது காரணமாக இதில் தளர்ச்சியுறுது ஒன்றிய வகையில் ஊக்கமாக உழைத்தல் கடன். காந்தியடிகளும் தம்மில் மாறுபட்ட கருத்துடையாரை அவ்வாறே இதில் ஒத்துழைக்குமாறு அழைக்கின்றார். அடிகளின் அவ் உரை வருமாறு:—

> "வர்ணாஸ்ரமத்தை நம்புபவர்களும் சரி, நம்பாதவர்களும் சரி, சீர்திருத்தக்காரர்கள் பலரும் தீண்டாதவர்கள் விஷயத்திலேயே கவனம் செலுத்துகின்றனர். தீண்டாமை விலக்கு வேலை இரண்டுக்கும் பொதுவானது. ஆகவே இப்போது ஏற்பட்டுள்ள போராட்டம்பொதுவாகத்தீண்டாமை விலக்கையே பொறுத்திருப்பதால், டாக்டர் அம்பேத்காரையும் அவரைப் போன்ற அபிப்பிராயமுடைய மற்றவர்களையும் இவ்வேலையில் மனப்பூர்வமாகக் கலந்து வேலை செய்யவேண்டுமெனக் கேட்டுக் கொள்ளுகிறேன்"

எனவே, காந்தியடிகளைப்போல் அவர் கூறும் வகுப்புமுறை வேண்டுமென்போரும், அது அடியோடு கூடாது என்பாரும் இந்நேரம் அவ் விவாதத்தில் தலையிட்டுப் பலத்தை இழக்காமல் தீண்டாமை ஒழிப்பு ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு கடனாற்றல் வேண்டும்.

## தந்தி.

சிங்கப்பூர் மாசி-மீ ௩-௨

| | |
|---|---|
| உண்டியல் | நூற்று ஐம்பத்திமூன்று |
| ஈயம் | எழுபத்தாறு |
| ரப்பர் | எட்டேகால் |

ரேங்கூன் மாசிமீ ௨-௨

| | |
|---|---|
| தவணை வட்டி | ௦-௮-௬ |
| பவுன் | ௧௮-௧௧-௬ |
| படகு நெல் | ௬௯, ௬௬ |
| ரயில் நெல் | ௬௫, ௬௯ |
| பெரியமில் ஸ்பெஷல் அரிசி | ௧௬௦,௧௬௨-௮-௦ |
| நசேன் சிறிய மில் ,, | ௧௮௦,௪௮௨-௮-௦ |
| மீடான் பசார் பழயது ,, | ௧௮௯ |
| மீடன் எஸ் கியூ ,, | ௨௦௦ |
| ரெடிபுழுங்கல்நீளமார்க்கட் | ௨௦௭-௮-௦,௨௨௦ |
| மில்சார் அரிசி | ௧௬௯, ௨௦௯ |
| நசேன் ,, | ௧௭௯, ௧௧௦ |

## உள்ளூர்.

| | |
|---|---|
| செய்கோன் வட்டம் | ௧-௮-௦ |
| சிங்கப்பூர் வட்டம் | ௧-௮-௦ |
| பினங்கு | ௧-௬-௦ |
| கொழும்பு | ௦-௬-௦ |
| சென்னை | ௦-௨-௦ |
| சென்னை (தைமீ) நடப்புவட்டி | ௦-௯-௬ |
| ரங்கூன் உண்டியல் வட்டம் | ௦-௮-௦ |
| ரங்கூன் (தைமீ) நடப்புவட்டி | ௦-௮-௬ |
| பவுன் | ௧௮-௧௪-௦ |
| வெள்ளி ரூபாயிடை | ௦-௯-௦ |

## அரியக்குடி.

### ராமவிலாஸ் பந்தடிமால்.

சென்ற திங்கட்கிழமை காலை அரியக்குடி ராமவிலாஸ் பந்தடிமால் சார்பில் நடைபெற்ற பாட்மிண்டன் போட்டி விளையாட்டின் கடைசிவிளையாட்டும் பரிசளிப்பு விழாவும ஊழியன் ஆசிரியர் திரு. ராய. சொக்கலிங்கன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. செட்டிமார் நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் சுமார் ௨௦௦ பேர் வரை வந்திருந்தார்கள்.

கடைசி விளையாட்டில் வெற்றிபெற்ற எரோ டீமைச்சேர்ந்த கானடுகாத்தான் திரு. சா. ராம. சித. வெங்கடாசலம் செட்டியார், சொக்கலிங்கம்புதூர் பழ.மு.நாகப்ப செட்டியார் ஆகியோருக்கும் ரன்னர்களான ராமவிலாஸ் டீம் அரியக்குடி திரு வயி.ராம. பழனியப்ப செட்டியார் தேவகோட்டை திரு. அரு. லெ. மாணிக்கம் செட்டியார் ஆகியோருக்கும் வெள்ளிக்கப்புகள் தலைவரால் பரிசளிக்கப்பட்டன. தலைவர் பரிசளிக்குங்கால் நிகழ்த்திய விரிவுரையில் பண்டைக் காலத்தில் நடைபெற்றுவந்த பந்தாட்ட முறைகளை தமிழ் இலக்கிய நூற்களிலிருந்து விளக்கி தற்காலபந்தாட்டத்திற்கும்,முற்கால பந்தாட்டத்திற்கு முள்ள ஒற்றுமை வேற்றுமைகளை எடுத்துக் காட்டினர். கடைசியாக எல்லோருக்கும் திரு பிச்சப்பா சுப்பிரமணியன் அவாகளால் நன்றி கூறுதலோடு பரிசளிப்பு விழா காலை கக-மணிக்குஇனிது நிறைவேறியது. (நமது நிருபர்)



## தீண்டா நண்பனே!

### உனது உதவி.

சத்தியேந்திரநாததத்தரின் "தோட்டி" என்ற வங்காள நூலிலிருந்து டாக்டர் ரவீந்திரநாத தாகூர் ஓர் கவியை ஆங்கிலத்தில் தாராளமாக மொழி பெயர்த்து, "ஹரிஜனன்" பத்திரிகைக்குச் செய்தியாக அனுப்பியிருக்கிறார். அதன் தமிழ்மொழி பெயர்ப்பு வருமாறு:—

"உன்மீது படாதொதுங்கி உன்னை அசுத்தமானவனென அவர்கள் ஏன் கூறுகிறார்கள், என் நண்பனே!

"உனது ஒவ்வொரு அடியையும் சுத்தம் பின்பற்றிவருகின்றது; அது நிலத்தையும் வானையும எங்கள் வாசத்துக்கு இனிமையாக்குகின்றது.

"ஓர் குழந்தைக் குதவு மதன் தாயைப்போல், நீ நாங்கள் ஆயாசம் தீர்ந்து சுகமுற உதவுகின்றனை;வெறுப்பென்பது மனிதனுக் குரியதல்ல வென்ற உண்மையை நிலைநாட்டுகின்றனை.

"உனது சேவையின் பரிசுத்த நதி, அசுத்தங்களை அடித்துச் சென்று, என்றும் நிர்மலமாய் இலங்குகின்றது.

"உலகினை ஆலகால விஷம் சூழ்ந்து கொள்ளாதவாறு, அதனைத் தானே உண்டு, ஒரு காலத்தில் சிவபெருமான் அதைக்காப்பாற்றினர்

"நீயோ,அத்தெய்வதத்துன்ப அனுபவத்துடனே, உலகை, அசுத்தத்தினின்றும் ஒவ்வொரு நாளும் காப்பாற்றுகின்றனை.

"வருக, நண்பனே! வருக, என் வீரனே! அபகீர்த்தி முத்திரையை மனிதனிடமிருந்து பெற்றிருப்பினுங் கூட, அவனுக்குச் சேவை புரியும் தைரியத்தை எங்களுக்கு நல்கு."

## தீண்டாமை விலக்கு மசோதா.

### சட்டசபை அங்கத்தவர்களுக்கு வேண்டுகோள்.

இந்தியச் சட்டசபை அங்கத்தவர்களுக்கு மகாத்மா காந்தியடிகள் வெளியிட்டுள்ள வேண்டுகோளில் சட்டசபை மெம்பர்கள் மசோதா பற்றி எவ்விதமான அபிப்பிராயங் கொண்டிருந்தாலும் தற்பொழுதுள்ள சட்டசபை கூட்டத்திலேயே அதனை விவாதத்திற்கு எடுத்துக்கொள்ள வேண்டுவன செய்வார்களென்று நம்புவதாகக் கூறியுள்ளார்.

### ௨௭-ம் தேதி விவாதத்திற்கு வரும்.

தீண்டாமை விலக்கு சம்பந்தமாக திரு. சி. எஸ். ரங்கய்யர், திரு எம். சி. ராஜா திரு. கயா பிரசாத் சிங், திரு. எஸ். சி. மித்ரா ஆகியோர் கொண்டு வருவதாக நோட்டீஸ கொடுத்துள்ள மசோதா சீட்டு எடுத்ததில் பெப்ரவரி ௨௭-ம் தேதி இந்தியச் சட்டசபையில் விவாதத்திற்கு ஒதுக்கிக்கொள்ளுவதாக ஏற்பட்டிருக்கிறது.

### குண்டூரில் கோவில் திறக்கப்பட்டது.

குண்டூர்ஜில்லாவைச் சார்ந்த மந்தன [illegible] ஒரு கோவில் [illegible] இருக்கிறது. இது தேசபக்த கொண்ட வெங்கடப்பய்யா முதலிய ஆந்திரநாட்டுத் தலைவர்கள் முன்னிலையில ஹரிஜனங்கள் உட்பட்ட எல்லா ஹிந்துக்களும் வணங்கும் பொருட்டு திறந்துவிடப்பட்டது.

# பொருளாதார மந்தம்.

## சரியான பரிகாரங்கள்.

### நாணயத்தைச் சரிப்படுத்துவதற்கென்ன?.

இந்தியாவின் தற்பொழுதையப் பொருளாதார நிலைமையைப்பற்றி, இந்திய அரசாங்கப் பொருளாதார உறுப்பினரான ஸர் ஜியார்ஜ் ஷஸ்டர் சமீபத்தில் இந்தியப் பொருளாதார மகாநாட்டில் பிரசங்கம் செய்தார். அதில் அவர், "அநேக பிரகாசமான திட்டுக்கள்" காணப்படுவதாகவும், இருள் விலகி வருவதாகவும் கூறினர். இதைப்பற்றி, தத்துவ சாஸ்திரப் பண்டிதப் பட்டம் பெற்ற திரு. சின்ஹா "மாடர்ன் ரிவ்யூ"ப் பத்திரிகையில் ஓர் ஆராய்ச்சியான கட்டுரை எழுதியிருக்கிறார். இந்தியாவில் விலைகள் வீழ்ந்திருக்கும் நிலையையும், பிற நாடுகளில் விலைகள் விழுந்திருக்கும் நிலையையும், மற்றும் பல அம்சங்களையும் விவரத்தோடு எடுத்துக்காட்டி, இந்தியாவின் பொருளாதார மந்தம் பிற நாடுகளைவிட மிகக் கடுமையானதாக விருக்கின்றது என்பதை விளக்கியிருக்கிறார். இந்த நெருக்கடிக்கு என்ன பரிகாரம் என்பது குறித்து, அவர் தம் அபிப்பிராயத்தை தெரிவித்திருக்கும் அக்கட்டுரையின் கடைசிப் பகுதி வருமாறு:—

டிக்கன்ஸ் என்ற ஆங்கிலப்போசிரியரின் கதை யொன்றில் உள்ள மிக்காபர் என்பவரைப் போல, தானுக ஏதாவதோர் வழியேற்படும் என்று, இந்தியா கையைக் கட்டிக்கொண்டு சும்மா உட்கார்ந்திருக்க வேண்டியதுதானே? தற்பொழுது இந்திய அரசாங்கத்தார் செயலற்று உட்கார்ந்துகொண்டிருப்பது நியாயந்தானு? யோசனை கூறப்பட்ட பரிகாரங்களுட் சில, நோயைவிட இன்னும் மிகக் கேடாய்ப் போய்விடலாமென்பது உண்மைதான். உதாரணமாக, ஒன்றைக் கூறலாம். எந்த ஒரு தனி நாட்டினுலும் அடக்க முடியாத உலகநிலைமை பற்றிய காரணங்கள் இருக்கின்றன. இவற்றுல், எந்தச் சாயான் குறிந்த கட்டுப்பாட்டு முறையும் விலைகளை உயர்த்தினும் உயர்த்தலாம், தவறியும் போகலாம். மேலும், இன்னும் [illegible] அதனுல் வேலையில்லாமல் [illegible]விடும். இப்பொழுது பொது [illegible] வேலைகள் எவற்றையேனும் [illegible]கொண்டால், புதிய வரிகள் போட்டே அவற்றை நடத்தப் பணம் சம்பாதிக்க வேண்டி வரும். ஏனெனில், அவை உடனே தம் செலவுக்குக் கட்டிக்கொள்ளத் தக்க லாபத்தைத் தருமென எதிர்பார்த்தல் வீணே. எவ்வாறாயினும் சரி; இந்த [illegible] நடவடிக்கைகளாலும் இவை போன்ற, [illegible] வரி விதிக்கும் முறை, ஒவ்வொரு சாமானுக்கும் இவ்வளவுக்கு மேற் போகக் கூடாதென [illegible]முறை (குவோடா விஸ்டம்), நாணய மாற்று [illegible]த்தை உசிதப்படி மாற்றும் முறை, ஆகியயாவும் எந்த நாட்டில் கைக்கொள்ளப்பட்டாலும்,அவைஇன்னோர்நாட்டில் பொருளாதார மந்தத்தை ஆழமாக்கிவிடும்; அந்த அளவுக்கு, பிரஸ்தாப நாடும் உட்பட உலகம் இக்கஷ்டத்தினின்றும் விடுபடுவதற்கு இவை தடை புரியும். இவற்றையெல்லாம் ஒப்புகொள்ளலாம்.

ஆனல், சாத்தியமான மட்டில் பொருளாதார சமனத்தை மறுபடியும் உண்டாக்கிக் கொள்ளுவதற்காக, இந்தியாவும், பிற நாடுகளைப்போலவே, தனது நாணயச் செலாவணியை (கரன்ஸி) ஒழுங்கு செய்து கொள்ளுதல் அதன் தெளிவான கடமையல்லவா? தற்பொழுதைய நெருக்கடியின் இறுதியான காரணங்கள் யாவையாயிருப்பினும், அவையாவும் நாணயத்தின் மூலமே வேலை செய்கின்றன என்பது நாம் அறிந்ததுதானே? இப்பொழுது, நாம் ஸ்டர்லிங்குடன் ரூபாயைப் பிணைத்து வைத்திருக்கும் முறையை அனுஷ்டித்துக் கொண்டிருக்கிறோம். ஸ்டர்லிங்கோ, பிரிட்டிஷ் அரசாங்கத்தார் நாணய மாற்றுக்கு ஈடு கொடுக்க வேண்டியது வைத்திருந்தும், தங்கத்தினின்றும் பிரிந்து ஒதுங்க அனுமதிக்கப்பட்டிருக்கின்றது. இங்கிலாந்தில பொருள்களுக்குள்ள விலைகளை ஆராய்ந்து பார்க்கும் பொழுது, வாழ்க்கைச் [illegible] விலைகளை நிதானிக்க அவர்கள் முயன்றுகொண்டிருப்பதாகக் காணப்படுகின்றது. வாழ்க்கைச் செலவோ, சற்றேறக் குறைய, உற்பத்திச் செலவுக்கு இணையாக விருக்கின்றது.வேறு வார்த்தைகளில் உரைக்கப்புகின், இந்தியாவோ, பிரிட்டிஷ் உற்பத்திச் செலவுக்குப் பொருத்தமான விதமாகத் தனது நாணயத்தைச் சரி செய்து வைத்துக் கொள்ள தனது ஆற்றலை யெல்லாம் ஈடுபடுத்தி உழைத்து, தனது தங்கத்தை யெல்லாம் கரைத்து வருகின்றது. இது இந்தியாவில் பிரிட்டிஷ் சாமான்களின் விற்பனையை அதிகப்படுத்தலாம்; ஆனல் இந்தியாவின் பொருளாதார சமத்தை மறுபடியும் உண்டாக்கிவிடாது என்பது வெள்ளிடையாக விளங்கும். இந்தியா ஸ்டெர்லிங்காகக் கொடுக்கவேண்டிய கடன்கள் மிக அதிகமாயிருப்பதால், ஸ்டெர்லிங்கு—ரூபாய்ப் பிணைப்பை எடுத்துவிடின் இந்திய அரசாங்கத்தாரின் பொருளாதார காரியங்கள் பெரிதும் குழப்பமடையும என்று சொல்லப்படலாம். என்றுலும், டாலர்களாக அமெரிக்காவுக்கு இங்கிலாந்து கொடுக்கவேண்டிய கடன் சுமை கடுமையாயிருந்தும், பிற நாடுகளிலிருந்து இங்கிலாந்துக்கு வரவேண்டிய ஸ்டெர்லிங்குக் கடன்கள் பின்னும் அதிகமாயிருந்தும், ஸ்டெர்லிங்கின் மதிப்பைக் குறைக்க இங்கிலாந்து தயங்கவில்லை யென்பதை நாம் நினைவில் வைத்தல் வேண்டும். செலவுகளுக்கும் விலைகளுக்கும் உள்ள தொடர்பைச் சரிப்பத்தி வைத்தலே, மற்ற யாவற்றினும் மிக முக்கியமான காரியம் என்பதை இங்கிலாந்து உணர்ந்திருப்பதுதான் இதன் காரணம்.

அன்றியும், சுலபமான வட்டிக்குக் குறுகிய தவணைக் கடன்களை இந்திய அரசாங்கத்தார் ஏன் ஜனங்களுக்கு வேண்டியவளவு வழங்கலாகாது? ஒட்டாவாவில் நடைபெற்ற ஏகாதிபத்தியப் பொருளாதார மகாநாட்டில், இந்த முறை நல்லதென, இந்தியாவுட்பட எல்லா நாட்டாரும் அங்கீகரிக்கரிக்கப்பட்டுளது. தலைமை ஸ்தலங்களில் கூட்டுப் பங்கு பாங்கிகளின் (ஜாயிண்ட் ஸ்டாக் பங்கு) டேவணி (டெப்பாஸிட்) விகிதங்கள் மட்டில் குறைக்கப்பட்டிருக்கின்றன.இது இந்தப் பிரச்சினைக்கு மிகவும் சொற்ப உதவியே புரியக்கூடியது. விவசாயிகளுக்கு நேராக விவசாயக் கடன் கொடுப்பதையும், கூட்டுறவுச் சங்கங்களின் (கோவாபரடிவ் ஸொஸைட்டி) மூலம் கடன் கொடுப்பதையும் அரசாங்கம் தைரியமாகக் கைகொள்ளவேண்டும; இதுவே இப்பொழுது தேவையாகும். முக்கியமாக, வங்காளத்தில், சுலபமான நிபந்தனைகளின் மேல் தாராளமாகக் கடன்கள் கொடுப்பதன் மூலமும், தற்பொழுதைய நெருக்கடியிலிருந்தும் [illegible] கொடுக்கும் ஸ்தாபனங்களைக் காப்பாற்ற வேண்டும. பண்டங்களை வாங்க ஜனங்களுக்கு உள்ள சக்தியில் தற்பொழுது ஏற்பட்டிருக்கும் அராஜகத்தனுல் விளையக்கூடிய பெரும் விபரீதங்களை இத்தகைய நடவடிக்கைகள் மாத்திரமே ஏதோ கொஞ்சம குறைக்கும. இவ்வாறு செய்தால்தான், உலகம் மறுபடியும் இந்நெருக்கடியினின்றும நிமிர்ந்து பழைய நிலையை அடையுங் காலத்து, அதனுல ஏற்படக்கூடிய நற்பயனகளை இந்தியாவும் அநுபவிக்கக் கொள்ள முடியும்.

### உலகிற் சிறிய ஆணும் பெண்ணும்.

உலகில் உள்ள மனிதர்களிலெல்லாம் மிகச் சிறிய மனிதன் ஒருவன போஸ்னியாவில இருக்கிறான். அவன் அதேசததுச் சுதேசு. அவனுடைய உயரம் கக-அங்குலம். வயதோ அறுபது. அவன ஓர் பண்ணை நடத்துகின்றான்.

உலகிலேயே மிகச்சிறிய பெண், உபங்கி ராஜ குமாரியாம் அவள் உயரம் ௬௦-அங்குலம். லண்டனில் ஓர் ஸர்க்கஸில் அவள் இப்பொழுது நாட்டிய மாடுகிறாள்.

## ஊழியனுக்கு ஜாமீன்.

### ரூ. ௨௦௦௦-ம் கட்டப்பட்டது.

நமது 'ஊழியன்' பத்திரிகையில் இந்திய அச்சுக்கூட அவசர அதிகாரச் சட்டத்தின் நான்காவது பிரிவின் முதல் உப பிரிவின் ஏ. பி. வகுப்புகளில் கூறப்பட்டிருப்பது போன்ற ஆட்சேபகரமான விஷயங்கள் வெளியாகி யிருக்கிறது என்ற காரணங் கூறிச் சென்னை அரசாங்கத்தார் அதன் பிரசுர கர்த்தா என்ற முறையில் ரூ. ௧௦௦௦-மும் அச்சிடுவோர் என்ற முறையில் ரூ. ௧௦௦௦-மும் ஜாமீன் கட்ட வேண்டு மென்று நோட்டீஸ் பிறப்பித்தனர். இதன்படி சென்ற வெள்ளிக்கிழமைஇராமநாதபுரம்ஜில்லா மாஜிஸ்திரேட் மிஸ்டர் கிரே முன்னர் திரு. ராய. சொக்கலிங்கன் ஆஜாகி ரூ. ௨௦௦௦- ஜாமீன் கட்டியுள்ளார்.

## அடுத்த காங்கிரஸ்.

### கல்கத்தாவில் நடைபெறும்.

இந்தியத் தேசியக் காங்கரசின் அடுத்த கூட்டம் கல்கத்தா நகரிலேயே நடத்தவேண்டும் முயற்சிகள் செய்யப்படுவதாகத் தெரிகிறது. கூடிய விரைவில் வரவேற்புக் கமிட்டி தேர்ந்தெடுத்து காங்கரஸ் தலைவர் முதலியோர் விஷயம் முடிவுசெய்யப்படும் என்றும் காங்கரஸ் மார்ச்சு மாத நடுவில் நடைபெறலாம் என்றும் சொல்லப்படுகிறது.

## சாரதாச் சட்ட மகாநாடு.

டில்லியில் இம்மாத ஆரம்பத்தில் திவான் பகதூர் ஹரிபிலாஸ் சாரதாச் சட்ட மகாநாடு கூடிற்று. அப்பொழுது சார்தாச் சட்டத்தை மீறி குழந்தைகள் மணம் நடைபெறுவதைத் தடுக்கும் பொருட்டுத் தற்பொழுதுள்ள சட்டத்தைத்திருத்த வேண்டுமென்றும், இச்சட்டம் உண்மையில் பொது ஜனங்களுக்கு நன்மை யளிக்க வேண்டுமாயின் சார்தாச்சட்டத்திற்கு எதிரிடையாக நடைபெறும் மணத்தைத் தடுத்து உத்திரவு பிறப்பிக்கும் அதிகாரம் ஜில்லா மாஜிஸ்திரேட்டிற்கு இருக்கும்படி அதனைத் திருத்த வேண்டு மென்றும் அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்ளுவதாக ஒரு தீர்மானம் நிறைவேறியது.

## சட்ட மறுப்புச் செய்திகள்.

### ஜனவரியில் தண்டிக்கப்பட்டவர்.

சட்டமறுப்பு சம்பந்தமாகச்சென்ற ஜனவரியில் சென்னை மாகாணத்தில் தண்டிக்கப்பட்டவர்கள் ௮௦-பேர்களென்றும், ஜனவரி இறுதியில் சிறையிலிருந்த மொத்த அரசியல் கைதிகளின் தொகை சென்னை மாகாணத்தில் மட்டும் ௧௦௯௧ என்றும் ஓர் செய்தி கூறுகிறது.

### மதுரையில் மறியல்.

மதுரையிலுள்ள முக்கிய சீமைத் துணிக் கடைகளில் சிலவற்றைக் காங்கரஸ் தொண்டர்கள் அடிக்கடி மறியல் செய்து வருகிறார்கள். அவர்களைப் போலீசார் அடித்துக் கலைத்து வருகிறார்கள்.

### காந்தி தபால் கார்டு கவர் விற்பனை.

சேலத்தில் காங்கரஸ் தொண்டர் திரு. கே. கே. சித்தய்யன் "காந்தி" தபால் கார்டுகால் அணு வீதமும் கவர் அரையணுவாகவும் விற்றதாகவும், இத்தகைய வியாபாரமுள்ள துண்டுப் பிரசுரங்களை விநியோகம் செய்ததாகவும் குற்றஞ்சாட்டப்பட்டு போலீசாரால் கைதுசெய்யப்பட்டுள்ளார். இவர் மீது முதல் வகுப்பு சப் டிவிஷனல் மஜிஸ்திரேட் முன்னர் வழக்கு நடைபெறுமென்று தெரிகிறது.

## மகாமாக உத்சவம்.

### முன் ஏற்பாடுகள்.

#### விஜயம் செய்வோர் கவனிக்க வேண்டியவை.

கும்பகோணத்தில் இம் மாதம் நடைபெறும் மகாமாக உத்சவத்திற்கு ஏராளமானவர்கள் நமது பகுதியிலிருந்து செல்லக்கூடும். அவர்கள் எவ்வித நோய்களாலும் பீடிக்கப் படாதிருக்க சில முக்கிய விஷயங்களைக் கவனிக்க வேண்டுவது மிக அவசியமாகும். ஆதலால் சுகாதார இலாகா அதிபர் வெளியிட்டுள்ள அறிக்கையை நமது வாசகர்கள் அறியும் பொருட்டு கீழே தருகின்றோம்.

#### முன் ஏற்பாடு.

கும்பகோணம் மகாமக உற்சவம் கோடிக் கணக்கான ஜனங்கள் கூடும் சமயமாதலால் எல்லாப் பிரயாணிகளின் சுகாதாரத்தையும் கவனிக்க வேண்டியது மிகவும் அவசியமான காரியம். குடி தண்ணீருக்காக பல குழாய்க் கிணறுகள் இறக்கப் பட்டிருக்கின்றன. மலஜல விசர்ஜனத்துக்காக பலவிடங்களில் தனிஏற்பாடு செய்யப் பட்டிருக்கின்றது. மகாமகக் குளமும் பொற்றாமரைக் குளமும் தவருயாரி சுத்தம் செய்யப் பட்டிருக்கின்றன. யாத்ரீகர்கள் இருப்பதற்கு பல விடங்களில் கொட்டகைகள் போடப்பட்டிருக்கின்றன. ரெயில்வேயிலும் தக்க ஏற்பாடுகள் செய்யப் பட்டிருக்கின்றன. போலீசாரின் உதவியும் போதியவளவு கிடைக்கும். இப்படி பிறர் என்ன உதவி செய்வதாயினும் யாத்ரீகர்கள் தாங்களாகச் செய்யக் கூடிய உதவிகள் சில உண்டு. அவற்றைக் கீழே தருகின்றோம்.

#### வருவோர் கவனிக்க.

குடி தண்ணீருக்கு ஆறுகளுக்காவது வேறு அசுத்தமான நீர் நிலைகளுக்காவது போகவேண்டாம். இவை அபாயகரமானவை. குழாய், குழாய்க் கிணறுகள் இவைகளிலிருந்து மாத்திரம் தண்ணீர் குடிக்கவேண்டும்.

பலவிடங்களில் சௌகரியமாக போதுமான கக்கூஸ்களும் சிறுநீர் கழிக்குமிடங்களும் அமைக்கப் பட்டிருக்கின்றன. இந்த மாதிரி யிடங்களில் மலஜலஉபாதைகளுக்குப் போகவேண்டும். திறந்த வெளிகளிலும் ஆறு குளங்கள் கரைகளிலும் அசிங்கம் செய்யக் கூடாது. அப்படிச் செய்தால் சுகாதாரத்துக்குக் கேடு விளையும்.

உற்சவ சமயத்தில் வசிக்க யாத்ரீகர் கொட்டகைகள் வெகு சௌகரியமானவை. இவ்விடத்தில் சுத்தமான ஜலமும், நல்ல உணவும், சுத்தமான கக்கூஸும் நல்ல வெளிச்சமும் உண்டு. அப்படியில்லாவிட்டால் குடியிருக்கத் தகுந்த வீடுகள் என்று அதிகாரிகளால் சிபார்சு செய்யப்பட்ட வீடுகளில் இருக்கலாம்.

முனிசிபாலிடியார் தங்கள் மேற்பார்வையில் தயார் செய்த சுகமான ஆகாரத்தை மலிவாக விற்பார்கள். இது பல விடங்களில் பொட்டலமாகச் செய்து விற்கப்படும்.

#### காலராவைத் தடுக்க.

வயிற்றுப்போக்கு அல்லது வாந்தி இருந்தால் உடனே சுகாதார அதிகாரிகளுக்குத் தெரியப்படுத்த வேண்டும். இது காலராவாயிருந்தாலு மிருக்கலாம். ஜாக்கிரதையாயிருப்பது நல்லது. சுகாதார உத்தியோகஸ்தர்கள் இது பரவாமல் தடுக்க முயற்சி செய்வார்கள்.

உற்சவத்துக்குப் பிறகு ஊருக்குத் திரும்பும்போது யாருக்காவது காலரா வந்தால் சுகாதார உத்தியோகஸ்தர்களிடம் தெரிவித்தால் அவர்கள் வேண்டிய உதவி புரிவார்கள்.

மகாமகத்திற்குப் புறப்படுமுன் காலராவைத் தடுக்க அம்மை குத்திக் கொண்டு புறப்படவேண்டும். ஆஸ்பத்திரிகளில் இனமாகக் குத்துவார்கள். இது காலராவராமல் காப்பாற்றும்.

ஒரு காலரா கேஸ்வந்தால் அதன் மூலம் ஆயிரம் உயிர்ச்சேதம் வரலாமென்பதை மறக்கக் கூடாது, இந்த மாதிரி கஷ்டம் வருவதற்கு இடங்கொடுக்காமலிருக்க வேண்டும்.

## இன்னேர் மாண அலையா?

### இதுவும் மேனட்டிலிருந்தே.

#### நோய் வராமல் காத்துக்கொள்ளும் வழிகள்.

"பதினைந்து ஆண்டுகளுக்கு முன் ஏற்பட்ட இன்புளுயன்ஸா ஆபத்தைப் போன்ற இன்னேர் மாண அலை இந்தியாவில் உண்டாகப் போகின்றதா?" என்று வினவும் "சண்டேடைம்ஸ்" பத்திரிகை பின் வருமாறு எழுதுகின்றது:—

நாட்டின் எல்லாப் பாகங்களிலிருந்தும அதிகமான மாண விகிதங்களின் கணக்குகள் வருகின்றன. காலராவும், பெரியம்மையும் பல பிரதேசங்களில் கடுமையாயிருக்கின்றன. பெரியம்மை எல்லா மாகாணங்களிலும் இருக்கின்றது'

மிக அதிகக் கவலை தருவது இன்புளுயன்ஸா மாணக் கணக்கே. பஞ்சாப் அதன் கடும்பிடிக்குள் அகப்பட்டுகொண்டிருக்கிறது. அதன் நகரங்களிற் சிலவற்றில் நியுமோனியாவினுல் பத்துக்கு மேற்பட்ட மாணங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இன்புளுயன்ஸாவிலிருந்தே இந்த நியுமோனியா உண்டாகின்றது.

இந்தக் கொள்ளை நோயும் மேனட்டிலிருந்தே வந்திருப்பதாய்க் காணப்படுகின்றது. சில வாரங்களுக்கு முன் இது இங்கிலாந்திலும் மற்ற ஐரோப்பிய நாடுகளிலும் மிகக் கடுமையாயிருந்தது. சர்க்கார் உத்தியோகஸ்தரில் ஏராளமான பலர் ஆஜரில்லாமல் சர்க்கார் இலாக்காக்கள் பல பெரிதும் தொல்லையுறும்படி, அவ்வளவு தூரம் இக்கொள்ளை நோய் அங்குப் பரவியிருந்தது.

ஆனாலும், மாண விகிதம் ௧௯௧௮-ம் ஆண்டிற் போன்ற அவ்வளவு அதிகமாக அவ்விடங்களில் இல்லை. ஏனெனில் இந்நாளில், அந்நாடுகளில் வைத்திய ஏற்பாடுகள் முன்னையினும் நன்றாகச் செய்யப் பட்டிருப்பதுதான். இந்தியாவிலுள்ள நாம் அவ்வளவு அதிர்ஷ்டம் வாய்ந்தவர்களாயில்லை. மேலும், இரண்டு வருடங்களாகப் பொருளாதார நெருக்கடிக்கு உட்பட்டிருக்கிறோம். இதனுல், நோயை எதிர்க்கும் உடல் நலனும் நம்முடைய ஜனங்களில் அநேகருக்கு இன்று மிகவும் குறைந்து போயிருக்கிறது. இன்புளுயன்ஸா தேசத்தை அதிகமாகத் தாக்காது விட்டு விட்டாலுங்கூட, நோயை எதிர்க்கும் வலு ஜனங்களுடைய உடம்பில் குறைந்திருப்பதால், பெரியம்மை, காலரா ஆகிய பிற நோய்களுக்கு மிக அதிகமானவர் இரையாகி விடுவார்கள்.

என்றாலும், திகிலடைய வேண்டிய அவசியமில்லை. உண்மையைக் கூறப்போனல், அத்தகைய நெருக்கடியைச் சமாளிக்கவேண்டி வரும் பொழுது, பயப்படுவதுதான் மிகவும் கெடுதலான பலனைத் தரும். நமது பாமர ஜனங்களிடையே ஒரு கதை வழங்கி வருகின்றது. ஒரு தேவதை நகரமொன்றுக்குச் சென்றாள். ஆறுமாதங்களில் பதினயிரம் உயிர்களை மட்டும் நான் கொல்லுகிறேன் என்று அவள் கூறினள். ஆறுமாதத்திற்குப் பிறகு மறுபடியும் அவள் தோன்றியபொழுது, ௫0,000 பேர் இறந்துவிட்டார்களே என்று ஜனங்கள் புகார் செய்தார்கள். 'நான் கொன்றது ௧0,000 பேரை மாத்திரமே; மீதிப் பேர் பயத்தால் இறந்துபோனர்கள்" என்று அவள் பதில் சொன்னுள். பெரும்பாலான கொள்ளை நோய்கள் விஷயத்தில் இதுவே உண்மையாக விருக்கிறது.

௧௯௧௮-ம் ஆண்டின் ஒரு அனுபவத்தை இங்கு நினைவுக்குக் கொணர்தல் நலமாகும். அந்நாளில் பாதிரியார் ஒருவர் தமது ஆஸ்பத்திரியில் நூற்றுக் கணக்கானவர்க்கு வைத்தியம் செய்துகொள்ள ஏற்பட்டும், ஒரேஒரு மாணம் கூட நிகழவில்லை என்று கூறினர். ஆரம்பத்தில் ஒன்றிருநாள் நோயாளியை அவர் பட்டினி போட்டதே இதன் காரணம். எல்லா நோயாளிகட்கும் இது மிகவும் பயன்தாக்கூடிய யோசனையாகும்.

நோய் வராமலே காத்துக்கொள்ளுவது நல்லதாகையால், ஒவ்வொருவரும் தமது உணவு விஷயத்தில் ஜாக்கிரதையாயிருக்கவேண்டும்; சொற்ப உணவே கொள்ளவேண்டும்; இரவில் வெகு நேரம் வெளியே செல்லலாகாது. அசுத்தக் காற்றுத் தேகத்தில் வீசக்கூடிய சர்க்கஸ் முதலிய வேடிக்கைகளுக்குச் செல்லலாகாது; நெருங்கிய கூட்டமுள்ள விடங்களுக்குப் போகாது விலகவேண்டும்.

## ரயில் அட்டவணை.

1—2—1933 முதல்

திருச்சியிலிருந்து காரைக்குடி வரும் வண்டிகள் விபரம்.

| வண்டியின் நெ. | வரும் சமயம் | மானமதுரைக்குப் புறப்படும் சமயம் |
|---|---|---|
| நெ. 25 பாசஞ்சர் | காலை 6-24 | காலை 6-30 |
| சிலோன் மெயில் | 10-10 | 10-20 |
| நெ. 27 பாசஞ்சர் | மாலை 1-37 | மாலை … |
| நெ. 29 பாசஞ்சர் | 4.13 | 4-35 |
| நெ. 33 பாசஞ்சர் | …. | 5-35 |
| நெ. 31 பாசஞ்சர் | இரவு 8-5 | இரவு … |
| தனுஷ்கோ எக்ஸ்பிரஸ் | 12-25 | 12-33 |

குறிப்பு:-நெ. 25 சென்னையிலிருந்து வரும் திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் தொடர்ச்சி. இதில் சென்னையிலிருந்து நேராக வரும் 1, 2, 3 வகுப்புகள் அடங்கிய ஓர் வண்டி இணைக்கப்பட்டுளது. இந்த வண்டி தனுஷ்கோடிக்கு நேராகப் போவது.

நெ. 29 காரைக்குடியிலிருந்து மானமதுரை வழியாக மதுரைக்கு நேராகச் செல்லும்.

நெ 31 லால்குடியிலிருந்து காரைக்குடிக்கு நேராக வருவது.

மானமதுரையிலிருந்து காரைக்குடிக்கு வரும் வண்டிகள்

| வண்டியின் நெ. | வரும் சமயம் | திருச்சிக்குப் புறப்படும் நேரம் |
|---|---|---|
| நெ. 32 பாசஞ்சர் | காலை … | காலை 6-45 |
| நெ. 30 மிக்சட் | 8-39 | 8-53 |
| நெ. 34 பாசஞ்சர் | 11-31 | 11-40 |
| சிலோன் மெயில் | மாலை 4-28 | மாலை 4-34 |
| நெ 26 பாசஞ்சர் | இரவு 7-54 | இரவு 8-7 |
| தனுஷ்கோ எக்ஸ்பிரஸ் | 12-27 | 12-36 |

குறிப்பு:-நெ. 32 வண்டி நேராக லால்குடி செல்லும்.

நெ. 34 மதுரையிலிருந்து நேராக காரைக்குடி வந்து லால்குடி வரை செல்லும்.

நெ. 26 தனுஷ்கோடியிலிருந்து நேராக வரும் வண்டி. இதில் சென்னை வரை நேராகப் போகும் 1, 2, 3 வகுப்புகள் அடங்கப் பெற்ற ஓர் வண்டி இணைக்கப்பட்டுளது. இது திருச்சியில் திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் வண்டியோடு சேர்க்கப்படும்.

### அமராவதி புதூர்.

இளைஞர் ஊழிய சங்கம்:—இச் சங்கத்தார் தைப்பூசத்தன்று ...குடியில் இரண்டு நாட்கள் தீண்டாமை, மதுவிலக்கு முதலியவைகளைப்பற்றிப் பிரசாரம் செய்தார்கள். இவர்களுடன் கூத்தனூர் சமதர்ம சங்கத்தாரும் சேர்ந்து பிரசாரம் செய்தார்கள். சனிக்கிழமையன்று அமராவதிபுதூரில் ஒரு வீதியைப் பாரதி பாட்டுக்கள் படித்துக்கொண்டு சுத்தம் செய்தார்கள் என்று ஒருநிருபர் எழுதுகிறார்.





## செய்கோன் சீர்கேடு.

### தாய்நாட்டவர்க்கு வேண்டுக்கோள்.

#### மெல்ல மெல்ல வசூலிப்பதே நலம்.

செய்கோனிலிருந்து, திரு. எஸ். ஆர். ராமநாதன் எழுதுவதன் சாராம்சம் வருமாறு:—

இன்று இவ்வுலகமே பொருளாதாரக் கஷ்டத்தினுல் பீடிக்கப்பட்டு, தாமரை இலைத் தண்ணீரைப்போல் தத்தளித்துக் கொண்டிருப்பது யாவரும் அறிந்த விஷயம். இவ்விதப் பணக்கஷ்டத்தினுல் மிகவும் சீர்குலைந்திருக்கும், தேசங்களில் செய்கோனும் ஒன்று என்பதை எல்லோரும் அறிவர். கஷ்டமே இன்னதென அறியாத ஓர் வனிதை, பிரசவ காலத்தில் வேதனையைத் தாங்க முடியாது கஷ்டத்தினுல் எவ்விதம் வருந்துவாளோ அதைப்போல, செய்கோனிலுள்ள மக்கள் யாவரும் பண்டைக்காலந் தொட்டு இந்நாள்வரை இவ்விதமான பொருளாதாரக் கஷ்டத்தில் இடுபடாது மிகவும் சந்தோஷமாக வாழ்ந்துவந்தார்கள். ஆனல், இன்றோ, இந்நகரில் உள்ள ஏழை முதல் பணக்காரர்வரை எல்லா ஜாதியினரும் பண நெருக்கடியால் படும் கஷ்டங்களை விளக்க ஒருவராலும் முடியாது.

சென்ற சில ஆண்டுகளுக்கு முன் நம் தாய் நாட்டிலுள்ள தனவணிகப் பெரியோர்கள் தம்மிடமுள்ள பணங்களை, உண்டியல் அதாவது இந்தியாவில் ரூபாய் ௧0௬ கொடுத்து இவ்வூரில் வெள்ளி ௧00 வாங்கும் காலத்தில் இங்கு அனுப்பி நம் தனவணிகர்களின் கடைகளில் வட்டிக்காக ஆசைப்பட்டு, ௧000 வெள்ளி கொடுக்கக்கூடிய ஓர் கடையில் வெள்ளி ௨000,௪000-ம் வரை கொடுத்து வைத்தார்கள். இவ்வூரிலிருக்கும் தனவணிகர்களும் கடன் கிடைக்குமளவு வாங்கி இனத்தில் கொடுத்து வாங்கினர்கள். அப்பால் சில நாள் சென்றபின் கடன் வாங்கிய கடைக்காரர்கள் தங்களுக்குக் கடன் தந்த தாய்நாட்டில் உள்ள தனவணிகப் பெரியோர்களுக்குத் தங்கள் பணங்களைத் தருவதாகவும் கை எழுத்துக் கடிதங்களை அனுப்பிப் பணங்களைப் பெற்றுக் கொள்ளுங்களென்றும் எவ்வளவோ கடிதம் எழுதியும், பின் ரிஜிஸ்தர் கடிதம் எழுதியும் வாங்கி வைத்துக்கொண்டு வாளாவிருந்து விட்டார்கள். தாங்கள் எத்தனை கடிதம் எழுதியும் ஒன்றுக்கும் பதிலிறுக்காததை உத்தேசித்து, பணத்தைக் கையில் வைத்துக்கொண்டிருந்தால் வட்டி நஷ்டம் வருமென்று எண்ணிப் பின்னும் இனங்களில் கொடுத்து வைத்தார்கள்.

ஆனல் இப்பொழுது நெல்லுக்கு விலை இல்லாமலும் மற்றத்தேசங்களின் நாணயங்கள் கூடியிருப்பதினுலும் இனங்களில் கொடுத்த பணங்களை வசூல் செய்வதற்கு மார்க்கமில்லாதாகி விட்டது. எனவே ஒவ்வொருவரும் தாங்கள் பணம் கொடுக்கும் காலத்தில் கூறிய வார்த்தைகளை எண்ணிப் பாராது பணம் ஒன்றையே பெரிதெனக் கருதி மிகக் கண்டிப்பாகக் கடிதம் கண்டதும் தாமதியாது பணத்தை அனுப்பவேண்டுமென்று எழுதலாயினர்.

மக்கள் யாவரும் வியாபார விஷயத்திற்குக் கடன் வாங்குவது உலக இயற்கையே. அது போல நமது தனவணிகர்களும் வியாபாரத்திற்காகக் கடன் வாங்கினர்கள். பின்வாங்கிய கடனைத் தருவதாகக் கடிதம் எழுதினர்கள். அக்கடிதங்களுக்கெல்லாம் பதிலைக்காணேம். அன்று பணம் தருவதாகக் கடிதங்கள் எழுதும் போதெல்லாம் பேசாதிருந்து விட்ட சிலர் இன்று பணத்தை உடனே அனுப்புங்கள் என்று கடிதம், தந்தி அனுப்புவதொடு நில்லாது மேல் நடத்தட்டுமா என்ற கடுஞ்சொற்களை உபயோகப்படுத்தவும் வக்கீல் நோட்டீசு அனுப்பவு முற்பட்டுள்ளார்கள். இதுதானு இவர்களின் சமூக ஒற்றுமை? வங்கிகள் வைத்து நடத்தும் அன்னிய தேசத்தாராகிய பிரெஞ்சு, ஆங்கிலேயர்களும் கூட இன்று உலகம் இருக்கும் நிலைமையை உத்தேசித்து நம்மவர்கள் கொடுக்கவேண்டிய கடன்களுக்கு செக்யூரிட்டி வாங்கி வைத்துக்கொண்டு கொஞ்சம் கொஞ்சமாகத் தரும்படி கூறுகிறார்கள். இந்தியாவில் பிறந்து இந்தியாவில் வளர்ந்த ஒரேஜாதியாராகிய தனவணிகப் பெரியோர்கள் தம் இனத்தார் என்பதையும் கிஞ்சிற்றேனும் மனதில் நினையாது இரக்கமற்ற முறையில் பணத்தை வசூல்செய்ய முற்படுவது நமது சமூகத்தையே சீர்குலைக்க முற்படுவதொக்கும்.

இதிலிருந்து கொடுத்த கடனை வசூல் செய்யவேண்டாம் என்று நான் சொல்ல முன்வரவில்லை. வசூலிக்க வேண்டுவது மிகவும் அவசியமே. ஆனல் மேற்கூறிய பிரகாரம் நெருக்கலாகாதென்பதே எனது அபிப்பிராயம். வங்கிக்காரர்களையும், இந்தியாவில் பிறந்து, இந்து மதத்திலிருந்து கிறிஸ்துவ மதத்தில் புகுந்த புதுச்சேரி முகியேமார்களையும் அவர்கள் பேசும் வார்த்தைகளையும் கவனித்துப்பாருங்கள். அவர்களை மெதுவாக இனங்களில் வசூல் செய்து சேரும் தொகைகளைச் சிறிது சிறிதாகத் தரும்படி கூறுகிறார்கள்; நம் தனவணிகர்கள் மட்டும் ௫000 வெள்ளியாக இருக்கிற கடையில் மாதந்தோறும் ௫00 வெள்ளி வீதம் தருவதாகச் சொன்னல் ஒத்துக்கொள்ளாது ஒரே தினத்தில் வெள்ளி ௫000 மும் வேண்டுமென்று கேட்டால் என்ன செய்வது? இவ்விதம் கேட்பவர்களும் பணம் மோசம்போய்விடப்போகிறது, உடனே மேல் நடத்துங்கள் என்று எழுதுகிறவர்களும் கேட்பதா நீதி? சிலர் கடிதத்தை வாங்கி வைத்துக் கொண்டு பேசாதிருந்தார்களே; ஏன் அவ்விதம்செய்ய வேண்டும்?வட்டிக்கு ஆசைப்படாதவர்களாக இருந்தால் தரும் சமயம் வெள்ளிகளை வாங்கி இஷ்டமுள்ள வங்கிகளில் போட்டு உண்டியல் விலை கூடிவந்தவுடன் தாமதமன்னியில் வருத்திக்கொள்ளலாமல்லவா? வட்டிக்கு ஆசைப்பட்டுப் பணம் தருவதாகச் சொல்லும் போது வாங்க மறுத்தார்கள். இவ்வூர்க் கடைக்காரர்களும் வட்டி நஷ்டம் வரக்கூடாதென்றெண்ணி இனங்களில் கொடுத்து வைத்தார்கள். இது சமயம் பண வீழ்ச்சியினுல் ஊர் சீர் குலைய இனங்களிலிருந்து முன்போல் வசூல் செய்வதற்கு மிகவும் கஷ்டமாக இருக்கிறது. ௧0 லட்சம் இனத்தில் உள்ள ஓர் கடையில் மாதம் ௧0000ம் வெள்ளி வசூல் செய்ய மார்க்கமில்லை.

மேல் நடத்தினுல் கோர்ட்டில் வருஷக் கணக்கில் தவணை கொடுக்கிறார்கள். சொத்தை ஏலம் போடுவதற்கு, குருவாயூர் ஆலயப் பிரவேசத்திற்கு, வைதிகக் குடுக்கைகள் முட்டுக்கட்டை போடுவது போல இவ்வூர் "கிரதி, அலாங் தோம் நிரைகத்தர்" அதாவது நெடுநாள் தவணைக்கு விவசாயிகளுக்கு ௧00க்கு ஆறுவட்டிக்குக் கடன் கொடுக்க சர்க்காரால் ஏற்படுத்தப் பட்டிருக்கும் கம்பேனியின் மானேஜரும், அதில் ஓர் மெம்பராகவும் நமது செட்டியார்கள் சங்கத்திற்கு ஆலோசனை தலைவராகவும் இருந்து வரும் கொம்மாந்தான் ஓசாயி என்பவரும் ஆக இவ்விருவர்களின் போசனையாலும் ஏலங்களெல்லாம் போடக் கூடாதென்று தடுக்கப்பட்டுவருகின்றன.

இவ்வூரிலிருக்கும் நமது செட்டியார்கள் சங்கமும் அரசியல் விஷயத்தில் தலையிடாது நம்மக்களின் கஷ்டங்களைக் கருதாமல், நாம் இனத்தில் கொடுத்த பணங்களை வசூல் செய்வதற்குச் சர்க்கார் செய்துவரும் நஷ்டங்களை விலக்காமல் தாய்நாட்டில் இருந்து பத்திரிகை வருத்திக் கொடுப்பதிலும், மணிப்பிரகாரம் உண்டியல் விலை காட்டுவதிலும், தந்தி எழுதிக் கொடுப்பதிலும் முன்னிற்பதானது மிகவும் விசனிக்கத் தக்கதாகும். மற்ற ஊர்ச் சங்கங்களைப் போல் நமது சங்கமும் அரசியல் விஷயங்களில் கலந்து, சர்க்கார் "கிரதி அலொங்தோம்" படுத்தும் கஷ்டங்களை விலக்கி நமது மக்களுக்கு வேண்டிய நன்மைகளைச் செய்யுமென்று எதிர்பார்க்கின்றேன் இவ்வருடம் இந்நகர்த் தைப்பூச உற்சவமும் வீண் ஆடம்பரமில்லாது நடத்துவதாக இவ்வூர் நகரத்தார்களால் தீர்மானிக்கப் பட்டிருக்கிறது. மேலும் கடைதவறாது செதெ தவணைப் பணம் வாவிருக்கிறதையும் மகமை எழுதும் தினத்தில் அசல் வட்டிகூடக் கொடுக்க வேண்டுமென்று கார்த்திகைக் கூட்டத்தன்று பலர் முன்னின்று பேசினர்கள். அதில் சிலர் ஊர் இருக்கக்கூடிய நிலைமையில் பணக்கஷ்டத்தினுல் ஒவ்வொருவரும் நின்று தவிக்குஞ் சமயத்தில் எவ்விதம் அசலை கொடுக்க முடியும், ஆகையால் வட்டியைத் தான் கொடுக்க வேண்டுமென்று சொன்னர்கள். முடிவில் வட்டியைக் கொடுப்பதென்றும் அசலை அடுத்த ஆண்டில் ஆறு வட்டியுடன் கொடுக்கிறதென்றும் தீர்மானம் செய்தார்கள். இவ்வூரில் தவணைக்குப் பணம் கொடுத்திருக்கும் பெரியோர்களே; இது காலபரியந்தம் பொறுமைகைக் கொண்டு இருந்தது போல் இன்னும் சிலகாலம் பொறுமையுடனிருந்து உங்கள் பணங்களைச் சிறுகச் சிறுக தரும்படிச்செய்து நமது சமூகத்தின் ஒற்றுமையை நிலை காட்டுவீர்களாக.

# கிழவனுக்கு இளம் பெண் மணம்.

## அதனுல் ஏற்படும் விபரீதங்கள்.

### விபசார விடுதிபற்றிய ஓர் ஆராய்ச்சி.

"சென்னை விபசார விடுதிக"ளுக்கு எப்படி ஆள் சேர்க்கப் படுகின்றது என்பது குறித்து, பாரிஸ்டர் திரு. இ. எல். ஐயர், (பி. எ.) அவர்கள் ஓர் ஆராய்ச்சியான கட்டுரையை "ஹிந்து"ப்பத்திரிகையில் எழுதியிருக்கிறார். நியாயஸ்தலங்களில் வந்த சில வழக்குகளையே உதாரணங்களாகக் கொண்டு, மனோதத்துவ ரீதியாக ஆராய்ந்து இதனை அவர் வரைந்திருக்கிறார். விபசாரம் மிகுதிப்படுவதற்கு முக்கியக் காரணங்களாக வறுமையையும், பொருத்த மற்ற விவாகங்களையும் கூறி அவர் நிரூபணம் செய்திருக்கிறார். பொருத்த மற்ற மணங் குறித்து அவர் எழுதியிருப்பது வருமாறு:—

விபசார விடுதிகளுக்கு ஆள் சேர்ப்பதற்கு மிகவும் பயன் தரும் ஆதாரமாக விருப்பவர், கிழவர்களுக்கு மணம் செய்விக்கப் படும் இளம் பெண்கள்தாம். "கொண்டு கிழமும் இளமையும் கூடிவாழா" என்று ஷேக்ஸ்பியர் கூறியிருக்கிறார். "ஓ! ஒரு கிழவனுடன் யுவதியொருத்தி என்ன செய்ய வியலும்!" என்று பர்ன்ஸ் என்ற ஆங்கில கவி கூறுகிறார். பின்னர், அந்த யுவதி தன் அத்தையின் யோசனையின் மேல், "அவன் மனமுடைந்து சாகும் வரையில் அவனைக் கடிந்து விழுந்து நாசம் செய்வேன். பிறகு அவனுடைய பழைய காசு எனக்கு ஓர் புதிய பாத்திரத்தை வாங்கித் தரும்" என்று தீர்மானித்துக் கொள்ளுகிறாள். ஆனால், விதவைகள் மறுமணம் செய்து கொள்ள இடமிருந்தால் தான், அந்தகைய வழி சாத்தியமாகும். விதவைகள் மறுமணம் செய்து கொள்ள வியலாத ஜாதிகளிலுள்ள இளம் பெண்கள் சம்பந்தப் பட்டமட்டில், வெறுப்படைந்த சில இளம் மனைவிகள், "வறுக்கும் எண்ணைச் சட்டியினின்றும் எரியும் தீயில் குதிக்க"த் தயாராயிருக்கிறார்கள். மிகவும் சமீபத்தில் இருபது வயதுடைய ஒரு மூசம்மரிய மார்ருந்தாயார் தன்னுடைய மூத்தாள் மகனான பதினெட்டு வயதுடைய பெண்ணுடன் ஓடி விட்டான். காலக்கிரமத்தில் இருவரும் ஓர் வேசை விடுதிக்குள் விழுந்து விட்டார்கள். ஆனால், அவர்கள் விடுவிக்கப் பெற்று, உறவினரிடம் திருப்பியனுப்பப் பட்டார்கள். மார்ருந்தாய் தனது கிழக் கணவனிடம் திரும்ப மறுத்து விட்டாள்; பெண் தந்தையிடம் செல்ல மறுத்து விட்டாள். இந்தத் தொல்லை, ஒரு கிழவன் இளம் மனைவியை மணந்ததாலேயே விளைந்தது.

வேறொரு வழக்கு எனக்குத் தெரியும். இத்தகையதோர் ஆபத்திலிருந்து ஓர் இளம் மனைவியை அதில் ஓர் வக்கீல் காப்பாற்றினர். இவ்வக்கீல் அடிக்கடி வெளியூர் மீதிதலமொன்றில் ஆஜராகிக் கொண்டிருந்தார். தனது கணவனுடைய நகைகளைத் தான் திருடிவிட்டதாகத் தன் கணவன் தன்மீது குற்றம் சாற்றும் வழக்கில், தன் வழக்கை நடத்தும்படி, ஓர் இந்துச் சிறுமி இவரை வேண்டிக் கொண்டாள். அவளுடைய கதையை உங்களுக்குத் தெரிவிப்பது தகுதியாகும்.

அவளுடைய தந்தை, அவளை ஓர் கிழவனுக்கு நான்காம் தாரமாகக் கொடுத்தார். கிழவருடைய முதல் மூன்று மனைவிகளும் இறந்து, அப்பொழுது தாரமற்றவராக விருந்தார். பெண்ணின் தந்தை மிகவும் ஏழை. ஓர் பணக்காரருடைய மனைவியாயிருந்தால், தம் பெண் உணவு, உடை, நகைகளுக்குப் பஞ்சமின்றிச் சௌக்கியமாயிருப்பாள் என்று தந்தை நம்பினார். இந்தக் கிரிமினல் வழக்குத் தொடரப்படும்பொழுது, பெண்ணுக்குப் பதினேழுவயது. கிழவனுடைய மூத்த மகனும் ஏறக்குறைய அதே வயதுடைய நல்ல வாலிபன். அவன் மெட்ட எண்ணத்துடன் தன் சிற்றன்னையிடம் சரசம் செய்ய முயன்றான். தந்தை மகனை ஆதரித்தார். பெண் ஓடிவிட்டாள். சென்னையில் எங்கே போவதென்று அவளுக்குத் தெரியவில்லை. ஒரு ஜட்காவண்டிக்காரன் அவளை வண்டியிலேற்றிக்கொண்டு, ஒரு விபசார விடுதியில் கொண்டுபோய் விட்டுச் சென்றான்.

சில மணி நேரத்தில் அந்த வீட்டின் தன்மையை அவள் கண்டு கொண்டாள். அவள் செய்த நாணயமான வேலைக்காக, இரக்கங் கொண்ட சில அண்டை அயலார் அவளுக்கு உணவும் உடையுமளித்தார்கள்.

தமது பெருமைக்குப் பங்கம்வந்து, நான் மனைவியைவைத்துக் கொண்டிருந்த கர்வத்துக்கு அவமானம் வந்துவிட்டதால், கிழக் கணவருக்கு ஆத்திரம் பொங்கியது. அவளிருக்குமிடத்தை அவர் கண்டுபிடித்தார். ஜாக்கிரதையான துப்புக்கள் வைத்து விட்டு அவள்மீது திருட்டு வழக்கொன்று தொடுத்தார். அந்தப் பகுதியிலுள்ள போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் வழக்கின் உண்மையை அறிந்துகொண்டார். கிழவரின் வாக்குமூலங்களில் வெள்ளிடையான முரண்பாடுகள் இருந்ததால், அது திருட்டுவழக்கல்லவென்று சப் இன்ஸ்பெக்டர் கிழவரிடம் கூறி விட்டார். கிழவர் அமைதியாக விருந்து இந்த முரண்பாடுகளின்றி இந்த வழக்கை ஜோடித்திருந்தால், விளைவு முற்றிலும் வேறாயிருந்திருக்கும் என்பது தெளிவு. ஆனால், கிழவர் தம் எண்ணங்களுக்குப் பங்கம் விளைவிக்கப்பட்டு விட்டதாக உணர்ச்சி கொண்டதால் போரத்திரமடைந்து, ஒரு வக்கீலிடம் யோசித்து, மாஜிஸ்திரேட் கோர்ட்டொன்றில் பிராதுகொடுத்தார். கிழவர் சப் இன்ஸ்பெக்டரிடம் கொடுத்த அசல் வாக்குமூலங்கள் சிறுமியைக் காப்பாற்றின; அவள் குற்றவாளியல்லவென்று விடுவிக்கப் பட்டாள்.

ஆனால், இதில் இடையில் நிகழ்ந்த ஒரு சம்பவத்தைக் குறிப்பிடவேண்டும். முதன் முதலிலேயே கோர்ட்டாரால், பெண்ணுக்கு ஜாமீன் வாரண்டு பிறப்பிக்கப்பட்டு விட்டது. பெண் ரிமாண்டில் வைக்கப்பட்டாள். எவரும் அவளுக்கு ஜாமீன் கொடுக்க இசையவில்லை. அவளுடைய சொந்தக்காரர்கள் மிகவும் ஏழைகளாதலால், அவர்களுடைய ஜாமீன் ஒப்புக்கொள்ளப்படவில்லை. அவளுடைய கணவரின் சொந்தக்காரர்கள் அவளுக்கு உதவிசெய்ய மறுத்துவிட்டார்கள். ஊன்ளூரிலிருந்த ஒரு மனிதன் அவளுடைய இளமையாலும் அழகாலும் மனங்கவரப்பெற்று, அவள் தன்னுடன் ஒழுக்கத்தை மீறிய வாழ்க்கையை நடத்த இசைந்தால், ஜாமீன் கொடுக்கத் தயாரெனச் சொன்னான். தனது துக்கத்தாலும் தான் நிர்க்கதியாயிருந்ததாலும், அவள் அவற்கு ஒப்புக்கொண்டாள். அவள் விடுதலையடைந்ததும், இருவரும், மனிதர் வாசமில்லாத ஓர் பழைய வீட்டுக்குச் சென்றார்கள். ஆனால், அவன் ஓர் சுவரில் கையைவைத்ததும, அவனை ஓர் தேள் கொட்டிவிட்டது. இந்தத் தெய்வாதீன நிகழ்ச்சி, அந்தத் துரதிர்ஷ்டவதியான பெண்ணின் கற்பைக் காப்பாற்றியது. தான் ஓர் கெட்டகாரியத்தைப்புரிய ஏற்பாடு செய்திருத்தலாகாதென ஈசுவரனே எச்சரித்ததாக அவன் எண்ணினான்.

பின்னால், கணவன் மீது சிவில் நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்பட்டன. அதன் பயனாக, அந்தப் பெண் இப்பொழுது ஜீவனாம்சம பெற்றுவருகிறாள். நாணயமான வாழ்க்கையையும் அவள் நடத்தி வருகிறாள். என்றாலும், இந்தச் சம்பவம் ஓர் விலக்கேயாகும். இத்தகைய கொடிய சந்தர்ப்பங்களுக்கு இரையாகும் ஒரு பெண் இறுதியில் ஓர் விபசார விடுதியில் நுழைந்து விடுவதுதான் வழக்கமாயிருக்கிறது. ஆனால், இவள் விஷயத்தில், சப் இன்ஸ்பெக்டரும், தேளும், வக்கீலும், விடுதலைக்குப் பின்னர் அவளுடைய உறவினரும் அவ்வாபத்தினின்றும் இவளைக் காப்பாற்றினர். ஒரு இளம் பெண் தனது வீட்டைவிட்டு ஒரு முறை வெளிப்பட்டு விட்டால், உடனே யில்லாவிட்டாலும், காலக்கிரமத்தில் விபசார விடுதியையே சேர்ந்து விடுகின்றாள். தர்மாதர்மத்தைப் பற்றிச் சிறிதும் எண்ணாத சாமர்த்திய சாலிகளான விபசார விடுதிக் கங்காணிகள், ரயில்வே ஸ்டேஷன்களிலும்வாடிக்கையாக ஜனங்கள் கூடுமிடங்களிலும் தயாராய்க் காத்துக் கொண்டிருக்கிறார்கள். பேதைப் பெண்களைக் கைப்பற்றிக் கொள்ளுவது இங்குச் சாத்தியமாகின்றது. தர்மவான்கள் தங்களுக்குத் தாங்களே திருப்தியடைந்து அமைந்து கிடைக்க, பாவிகள் தங்கள் இரையைக் கைப்பற்ற விழிப்புடன் வேலைசெய்து கொண்டிருக்கிறார்கள்; இது உண்மையிலேயே வருந்தத் தக்கது.

பணம் வாங்குவதற்காகக் கிழவனுக்குப் பெண்ணைக் கொடுத்து விட்டு, அவளைக் கெட்டகாரியங்களுக்கு உபயோகப்படுத்தும் பெற்றோரு முண்டு. இதை விளக்கும் சம்பவங்களு மிருக்கின்றன.

# தீண்டாமையும் ஜாதியும்.

## மகாத்மாவின் அபிப்பிராயம்.

### விவேகானந்தர் கருத்துகள்.

தீண்டாமையை ஒழிக்கும் பொருட்டு தீண்டாமை விலக்கு ஊழியர் சங்கத்தாரால் வெளியிடப்படும் "ஹரிஜனன்" என்ற பத்திரிகை சென்ற சனிக்கிழமை வெளிவந்துளது. அதில் தீண்டாமை, வகுப்பு வேற்றுமை ஆகியவற்றைக் குறித்து டாக்டர் அம்பேத்கார், மகாத்மா காந்தியடிகள் ஆகிய இருவரும் எழுதியிருப்பதன் சாரத்தைக் கீழே தருகிறோம்.

#### அம்பேத்கார் அபிப்பிராயம்.

"தீண்டாதார்என்பது வகுப்புவேற்றுமை அமைப்பால் ஏற்பட்ட பயனாகும். ஜாதிகள் பல இருக்கும்வரை "தீண்டாதார்" என்பவரும் இருந்தேவருவர். ஜாதி வர்ணாசிரமத்தை ஒழித்தாலொழிய 'தீண்டாதாரின்' கதிமோட்சத்திற்கு வேறு வகையில்லை. ஹிந்து மதத்திலிருந்த இவ்வித பகைமையையும், கெட்ட முறையையும் ஒழித்தாலன்றி, வரப்போகும் போராட்டத்தில் ஹிந்துக்கள் எதிர்த்து நின்று நிலைத்திருப்பது மிக அருமை."

#### மகாத்மா கருத்து.

"கற்றுணர்ந்த ஹிந்துக்கள் பலர் இவ்வித அபிப்பிராயமே கூறுகின்றனர். ஆனால் நான் இவ்வித கருத்து கொள்வதற்கில்லை. வர்ணாசிரம தர்மமும், ஜாதிமுறையும் தீமையானதென்றும் பகைமை யுண்டுபண்ணுவதென்றும் நான் நினைக்கவில்லை. ஜாதி முறையில் சில குறைபாடுகளிருக்கின்றன. ஆனால் தீண்டாமையைப் போல் அதில் பாபமெதுவுமில்லை. தீண்டாமை என்பது ஜாதிமுறையின் பயனென்று கூறுவது தேகமே மலங்கள் உற்பத்திக்கும், தெற்பயிராலேயே களைப்பூண்டுகளேற்படுவதற்கும் காரணமாக விருக்கிறது என்று கூறுவதற்கு ஒப்பாகும். தீண்டாமை இருக்கிறதே என்று ஜாதி முறையை ஒழிப்பதானது, மலங்களிருக்கிறதே என்று தேகத்தையும், களைகளை நீக்க நெற்பயிரையும் அழிப்பதற்கு ஒப்பாகும். தீண்டாமை என்பதை அடியுடன் ஒழிக்கவேண்டியதே. முழு அமைப்பு நசிந்துப் போகாமல் தடுக்க இவ்விதம் செய்யவேண்டியது அவசியம். எனவே தீண்டாமை என்பது ஜாதிமுறையால் விளைந்த தீங்கன்று. ஹிந்துமதத்தில் உயர்வு தாழ்வென்ற வேறுபாடொன்று புகுந்து ஹிந்துமதத்தை அழித்துக்கொண்டே இருக்கிறது.

உயர்வு, தாழ்வென்ற எண்ணமே இதற்கு மூலகாரணமாகும் தீண்டாமையை எதிர்ப்பதானது ஹிந்து மதத்தில் புகுந்துள்ள உயர்வு — தாழ்வென்பதை எதிர்ப்பதாகும் தீண்டாமை ஒழிந்ததும், ஜாதி முறை சுத்தப்படும்—அதாவது, உண்மை வர்ணாச்ரம தர்ம மேற்படும். இந்து சமூகத்தில் ச பாகுபாடுகளிருந்து ஒவ்வொரு அம்சமும் பரஸ்பர உதவியாக நின்று ஒன்றுக்கொன்று உயர்வு, தாழ்வின்றி சமமாக இருந்து, ஹிந்து மத மனைத்திற்கும் ஒவ்வொரு அம்சமும் ஆதரவளித்து நிற்க வேண்டுமென்பதே எனது மனப்பூர்வமான நம்பிக்கை. அது எப்படி என்றோ, அவ்வித வர்ணாச்சிரமம் எத்தன்மைத்தானதென்றோ தற்சமயம் பரிசீலனை செய்வது அவசியமில்லை. அவ்வித வர்ணாசிரம தர்மத்திலேயே எனக்கு பூரண நம்பிக்கை வர்ணாசிரம தர்மத்தை ஒழித்தாலன்றி தீண்டாமை நீங்காதென்று கூறும் டாக்டர் அம்பேத்கார் போன்றவர்களினின்றும், நான் ஆதி முதல் வேறான அபிப்பிராயம் கொண்டிருக்கிறேன். அவர்கள் ஜாதிக்கும், வர்ணத்திற்கும் வித்தியாசம் காட்டாதிருக்கின்றனர். ஆனால் அது வேறு விஷயம். வர்ணாசிரமத்தில் நம்பிக்கை யிருந்தாலும், இல்லாவிடினும், தீண்டாதாரின் முன்னேற்றத்திலேயே ஹிந்து சீர்திருத்தக்காரர்களனைவரும் தற்சமயம் கவனம் செலுத்தி வருகின்றனர். தீண்டாமையை எதிர்ப்பதில் இருசாராரும் சேர்ந்து போராடலாம். எனவே டாக்டர் அம்பேத்காரும் அவரைப் போன்ற நோக்கம் கொண்டவர்களும் தீண்டாமை எனும் பூதத்தை எதிர்த்துப் போராடுவதில் முனைந்து நிற்க வேண்டு மென்றழைக்கிறேன். முடிவில் வர்ணாசிரமத்தை எதிர்க்க ஆட்சேபகரமாக ஒன்றுமிருக்காதென்பதையே நாமனைவரும் அநேகமாகக் காண்போம். ஆனால் பின்னும் வர்ணாசிரமம் விகாரமாகவும் ஆட்சேபகரமாகவும் தோன்றில் அதை ஒழிக்க ஹிந்து சமூக மனைத்தும் சேர்ந்து விடும். தீண்டாமையை எதிர்த்து நடக்கும் இப்போராட்டத்தில் நிர்ப்பந்த முறையை அனுஷ்டிக்கவில்லை. மனமாறுதலேற்படுத்துவதே இதன் விசேஷம். முடிவில் நாமனைவரும் ஒன்று சேர்ந்தே ஒரே அபிப்பிராயம் கொண்டிருப்போமென்று நம்புகிறேன். அவ்வித மில்லாமற்போயின் பின்னர் வர்ணாச்ரமத்தை யார் எப்படி எதிர்ப்பதென்பதைப் பற்றி ஆலோசிக்கலாம்."

#### வகுப்பு வேற்றுமைபற்றி விவேகானந்தர்.

வகுப்பு வேற்றுமையின் தீமையைப் பற்றி சுவாமி விவேகானந்தர் அபிப்பிராயம் வருமாறு:—

(௧) "மனிதனுக்குப் பேசுவதிலும் ஒவ்வொன்றைப்பற்றிச்சிந்திக்கவும்சுதந்தரம் வேண்டுவது எவ்வளவு அவசியமோ அவ்வளவு உணவு, உடை, மணம் முதலியவற்றிலும்—அவன் பிறருக்கு இன்னல் விளைவிக்காதிருக்குமட்டும்—சுதந்திரம் இருக்கவேண்டியது அவசியமாகும்.

(௨) சாதி வேற்றுமையே மாயையின் ஆணிவேராகவும், மக்களை வேறு பிரிக்கும் பெரும் சுவர்களாகவும் இருக்கிறதென்ற அபிப்பிராயம் என் மனதில் நாள் செல்லச் செல்லச் செல்ல உறுதி யடைந்து வருகிறது.

(௩) புரோகிதர்களால் எழுதப்பட்டுள்ள புத்தகங்களில் வகுப்புவேறு பாடு என்பதை போன்ற பைத்திய மான விஷயங்கள் காணப்படுகின்றன, இறைவனால் வெளியிடப்பட்டுள்ள நூற்களில் இவை கிடையா.

(௪) சாதியை ஒப்புக்கொள்ளாத பெரிய இந்தியத் தத்துவ ஞானி புத்த பெருமான் ஒருவரே.

பிற தத்துவ ஞானிகளெல்லாம் சில சமூக வேற்றுமைகளுக்குச் சிறிதேனும் உட்பட்டவர்களாகவே காணப்படுகிறார்கள்."

#### புதுவயல்.

வழியனுப்பு உபசாரம்:—ஸ்ரீ சரஸ்வதிசங்கத்தின் அங்கத்தினர்களான திரு. அ.சு.பள. சு.சோம. ராமசாமிச் செட்டியாரவர்கள் பர்மாநாடு செல்வது கருதி ஆங்கீரஸ-ஹூ தை மீ கசு-உ காலையில் திரு. வீர. பழனியப்ப செட்டியாரவர்கள் தலைமையிலும் திருவாளர் பழ. ப. ப. வீரப்ப செட்டியாரவர்களும் திரு. பெரி. அள. வீர. அழகப்ப செட்டியாரவர்களும் பர்மாநாடு செல்வது கருதி ஆங்கீரஸ-ஹூ தை-மீ உகூ-உ திரு. எ. பெரி. வீரப்ப செட்டியாரவர்கள் தலைமையி[illegible] கூட்டங்கள் [illegible] விருந்தினர் [illegible] பொழிவாற்றி [illegible] ருந்தினர்களுக்குத் [illegible] லை சூட்டப்பெற்று [illegible] கூட்டங்கள் நன்கு [illegible] று காரியதரிசி அறி[illegible] விக்கிறு



# மகாத்மாவை விடவேண்டும்.

## சட்டசபையில் கோரிக்கை.

### சரமாரியான கேள்விகள்.

#### "விடுதலைமுறை வெற்றியளிக்கவில்லை" யென்ற பதில்.

பிப்ரவரி ௬-ம் தேதி இந்தியச் சட்டசபையில் கேள்வி கேட்கும் நேரத்தில் பெரும் பகுதி மகாத்மாவின் விடுதலையைப் பற்றிய கேள்விகட்கு விடையளிப்பதில் கழிந்து போய்விட்டது. அவற்றின் விவரம் வருமாறு:—

ஜனப் மாருத் ஆமத்:—சென்ற டிசம்பர், ஜனவரி மாதங்களில் மகாத்மா காந்தியை விடுதலை செய்ய வேண்டுமென்று கோரும் தந்திகள் அல்லது முறையீடுகள் எவ்வளவு இந்திய அரசாங்கத்தாருக்கு வந்து சேர்ந்தன?

உள்நாட்டு மெம்பர் ஸர் ஹாரிஹெயிக்:—இந்த உ மாதங்களிலும் சர்க்காருக்கு எந்தத் தந்தியாவது அன்றி முறையீடாவது வரவில்லை.

##### சமரசக்கடிதப் போக்குவரத்து இல்லை

ஜனப் மாருத் ஆமத்:—சட்ட மறுப்புச் சம்பந்தமாக காந்திஜீ கொண்டுள்ள மனோபாவத்தைத் தெரிந்து கொள்ளுவதற்காக அரசாங்கத்தார் அவருடன் ஏதேனும் கடிதப் போக்குவரத்துச் செய்தனரா?

ஸர் ஹெயிக்:—இம்மாதிரியான தன்மை வாய்ந்த கடிதப் போக்குவரத்து எதுவும் நடக்கவில்லை.

ஜனப் மாருத் ஆமத்:—ஜனவரி மாத ஆரம்பத்தில் கல்கத்தாவில் நடந்த ராஜப் பிரதிநிதியின் நிர்வாக சபைக் கூட்டத்தில் இவ்விஷயமாக விவாதம் நடந்ததா?

ஸர் எச். ஹெயிக்:—ராஜப்பிரதிநிதியின் நிர்வாக சபைக் கூட்டம் ரகசியமானது.

திரு. வி. எஸ். ரங்கஐயர்:—தீண்டாமையைப்பற்றிக் காந்திஜீ செய்யும் பிரசாரம் சட்ட மறுப்பிலிருந்து பொது ஜனங்களது கவனத்தை வேறு வழிகளில் இழுத்து விட்டதென்பது உண்மையா? இது உண்மையானால் காந்திஜீயையும் பிற சட்ட மறுப்புக் கைதிகளையும் விடுதலை செய்யும் உசிதத்தைப்பற்றி அரசாங்கத்தார் சிந்தித்துப் பார்ப்பார்களா?

ஸர் ஹெயிக்:—தீண்டாமை விலக்குப் பிரசார இயக்கம் சட்ட மறுப்பை ஆரிக்கின்ற சிலரது கவனத்தை அதிலிருந்து வேறு செலுத்தியிருக்கலாம். ஆனால் சட்ட மறுப்புத்தான் இன்னும் காங்கிரஸ் தலைவர்களது திட்டமான முறையாக இருந்து வருகிறது.

##### அமைதிக்குச் சர்க்கார் ஆவல்.

திரு. வி. எஸ். ரங்க ஐயர் ஒருவரே பல உப கேள்விகளைக் கேட்டார். இவற்றிற்கு விடையளிக்கையில் திரு. ஹெயிக் கூறியதாவது:—அரசாங்கத்தார் அரசியல் பிரச்சினைகளைப்பற்றி விவாதிப்பதற்காக மாத்திரமின்றிச் சாதாரண நிர்வாக காரியங்களுக்காகவும் அமைதியான நிலைமையை ஏற்படுத்த மிக ஆவலுள்ளவர்களாக இருக்கின்றனர்.

திரு. ரங்க ஐயர்:—காந்திஜீயையும் பிற ராஜீயக் கைதிகளையும் சிறையில் வைத்திருப்பது எந்த அரசியல் பிரரேபனையின் விவாதத்திற்கும் பாதகமாக முடியுமென்பது அரசாங்கத்தாருக்குத் தெரியுமா?

ஸர் ஹெயிக்:—அம்மாதிரி முடியுமென்று நான் நினைக்கவில்லை. இந்தப் பிரச்சினைக்கான பரிகார விசை யனைத்தும் சட்ட மறுப்பு இயக்க சம்பந்தமாகக் காங்கிரஸ் கொள்ளும் மனோபாவத்தைப் பொறுத்ததாக இருக்கிறது. எல்லாம் காங்கிரஸ்காரர்கள் சட்ட மறுப்பு இயக்கத்தை நீடித்து நடத்தவிருக்கின்றார்களா அல்லது அதனைக் கைவிட விருக்கின்றார்களா என்பதைப் பொறுத்ததாகவே இருக்கின்றது.

##### விடுதலைமுறை வெற்றியளிக்கவில்லை.

திரு. ரங்க ஐயர்:—காந்திஜீயும் மற்றக் கைதிகளும் விடுதலை செய்யப்பட்டால் அவர்கள் சட்ட மறுப்பைக் கைவிடுவார்களென்று அரசாங்கத்தார் நினைக்கவில்லையா?

ஸர் ஹெயிக்:—அந்த முறையைக் கையாண்டு பார்த்தாகிவிட்டது. அது வெற்றிகரமான பலனை அளிக்கவில்லை.

இச்சமயத்தில் திரு. வி. எஸ். ரங்க ஐயர் காந்திஜீ உ-வது சர்வகட்சி மகாநாட்டிலிருந்து திரும்பி வந்ததும ராஜப்பிரதிநிதியைப் பேட்டிகண்டு பேச விரும்பினர் என்றும் காந்திஜீக்கு அப்பொழுது ராஜப்பிரதிநிதி பேட்டி யளித்திருந்தால் சட்ட மறுப்பைத்திரும்ப ஆரம்பிக்க அவசியமே இல்லாதிருந்திருக்கு மென்றும் கூறினர்.

உள்நாட்டு மெம்பர் விடையளிக்கையில் கூறியதாவது:—நான் திரு. ரங்க ஐயரது அபிப்பிராயத்தை ஏற்கவில்லை. காங்கிரஸ் சட்ட மறுப்பு இயக்கத்தைத் திரும்ப ஆரம்பிப்பதாகத் தீர்மானம் செய்த பிறகே திரு. காந்தி ராஜப்பிரதிநிதியைக் கண்டு பேச விரும்பினர் என்பதை எடுத்துக்காட்டுகின்றேன். மேலும், அவர் ஐக்கிய மாகாணத்திலும் எல்லைப்புறத்திலுமுள்ள தமது சிஷ்யர்கள் நடவடிக்கை எடுத்துக்கொள்ளுவதைத் தடுத்து நிறுத்தி இருக்கவேண்டும். அவர் நிலைமையைப்பற்றி விசாரித்தறிந்திருக்கவேண்டும். இதன் பிறகே அவர் ராஜப்பிரதிநிதியைக் கண்டுபேச விரும்பியிருக்கவேண்டும்.

##### எல்லார் ஒத்துழைப்பும் வேண்டியதே

இன்னும் சில கேள்விகளுக்கு விடையளிக்கையில் உள்நாட்டு மெம்பர் கூறியதாவது:—அரசியல் சீர்திருத்தத்தை அமுல் நடத்தி வைப்பதற்கு இந்தியாவிலுள்ள சகல கட்சியாருடைய ஒத்துழைப்பையும் பெற அரசாங்கத்தார் மிக்க ஆவலுள்ளவர்களாக இருக்கின்றனர். ஆனால், தேசத்தின் சமாதானத்திற்குப் பங்கம் விளைக்கக்கூடிய முறையில் அதனைப்பெற விரும்பவில்லை என்று வற்புறுத்துகிறேன்.

திரு. எஸ். வி. மித்ரா:—சட்ட மறுப்புச் சம்பந்தமாகக் காங்கிரஸ் எதிர்காலத்தில் கொள்ளக்கூடிய மனோபாவத்தை நிர்ணயிப்பதற்காகக் காங்கிரஸ் தலைவர்களை விடுதலை செய்ய வேண்டுமென நான் யோசனை கூறுகின்றேன்.

##### பிறர் கலந்து யோசிக்கவேண்டும்.

ஸர் ஹெயிக்:—சிறைச்சாலைக்கு வெளியே பல காங்கிரஸ் தலைவர்க ளிருக்கின்றனர். சுயேச்சையாயுள்ள அவர்கள் தங்களுள் கலந்து ஆலோசனை செய்யலாம்.

திரு. கயாப்பிரசாத் சிங்:—சட்ட மறுப்பு இயக்கம் முழு வேகத்துடன் நடைபெற்றுக் கொண்டிருக்கையில் இர்வின் பிரபு பல பேட்டிகளை அளிக்கவில்லையா?

ஸர் ஹெயிக்:—திரு. காந்தி சட்டமறுப்பு இயக்கத்தை நிறுத்த மிக்க ஆவலுள்ளவராக இருப்பதாக அப்பொழுது தெரியவந்தது. அதனால் அப்பொழுது அவருக்குப் பேட்டிகள் அளிக்கப்பட்டன.

திரு. ராமகிருஷ்ண ரெட்டியும் திரு. கயாப் பிரசாத சிங்கும் காந்திஜீயையும் பிற கைதிகளையும் விடுதலை செய்ய வேண்டுமெனக் கோரும் மற்றொரு கேள்வியைக் கேட்டனர்.

உள்நாட்டு மெம்பர் ஸர் ஹெயிக்:—விடுதலை செய்யப் பட்டால் சட்ட மறுப்பு இயக்கம் திரும்பத் துவக்கப்பட மாட்டாதெனத் தெளிவாக அரசாங்கத்தாருக்கு உறுதிமொழியளிக்க வேண்டுமென நான் மீண்டும் கோருகின்றேன்,

##### அவசரச் சட்ட அமுல் பலிக்கவில்லையா?

திரு. கயாப் பிரசாத்சிங்:—அவசரச் சட்டங்களின் அமுல் பலிக்க வில்லை என்றும் இதனால் தீங்கள் காந்திஜீயையும் பிறரையும் விடுதலை செய்ய மறுக்கிறீர்களென்றும் நான் கொள்ளலாமா?

ஸர் ஹெயிக்:—அவசரச் சட்டங்களின் படி எடுத்துக் கொள்ளப் பட்ட நடவடிக்கைகள் பலனுள்ளவையாக இருக்கின்றன. இந்த வேலைகள் திரும்பத் துவக்கப் படமாட்டாவென்று உறுதிமொழியைப் பெறுமுன்பு இந்த அவசரச் சட்டங்களைத் தளர்த்தினால் அபாய மேற்படுமென்பது வெளிப்படை. விடுதலை யடைந்தவர்களில் பெரும்பான்மையோர் சட்ட மறுப்பை ஆரம்பிக்கவில்லை என்று திரு. ரங்கஐயர் கூறியதை நானும் ஒப்புக் கொள்ளுகின்றேன்.

##### "அரசாங்கத்தார் நல்லெண்ணம்"

ஸர் ஹரிசிங் கவுரும் திரு. ரங்கஐயரும் சேர்ந்து கேட்ட கேள்விக்கு விடையளிக்கையில் உள்நாட்டு மெம்பர் கூறியதாவது:—அரசாங்கத்தார் நல்லெண்ணத்துடனிருக்கின்றனர்; அந்நல்லெண்ணத்தை எந்தச் சமயத்தும் சோதித்துப் பார்த்துக் கொள்ளலாம்.

திரு ஆங்கில்ஸாரியா:—காந்திஜீயிடமும் அவருடைய இயக்கத்தினிடமும் இந்தியர்களில் பெரும் பகுதியினருக்கு முற்றிலும் வெறுப்பேற்பட்டிருக்கின்றதென்பது தன்மை யில்லையா?

ஸர் ஹெயிக்:—அது ஒரு பகுதியினர் சார்பாகத் தெரிவிக்கப் படும் நியாயமான அபிப்பிராயமென்று நான் நினைக்கின்றேன்.

##### பெரியதா, சிறியதா?

திரு. நியோகி:—அந்தப் பகுதி சிறியதா அல்லது பெரியதா?

ஸர் ஹெயிக்:—நான் ஒரு பகுதி எவ்வளவு என்பதை வியாக்யானஞ் செய்வதில் இறங்கமாட்டேன்.

திரு. சென் ஆலயப் பிரவேச மசோதா சம்பந்தமான பிரசாரத்திற்கு அரசாங்கத்தின் உதவியைக் காந்திஜீகோரியிருப்பதைக் குறிப்பிட்டு, இதனால் காந்திஜீ சட்ட மறுப்பு இயக்கத்தை ஏறக்குறையக் கைவிட்டுவிட்டாரென்றோ அல்லது விடுதலை செய்தால் அவர் தமது முழுநோக்கத்தையும் தீண்டாமை விலக்கிற்காகச் செலவிடுவாரென்றோ ஏற்படுகின்றது என்று கூறினர்.

##### காந்திஜீயின் கருத்தென்ன?

உள்நாட்டு மெம்பர் விடை யளிக்கையில் ஜனவரி ௩௪-ந் தேதியன்று வெளியிட்ட அறிக்கையில் திரு. காந்தி தமது சாமர்த்திய மனைத்தையும் சட்ட மறுப்புக்காக உபயோகப் படுத்தி யிருப்பதாகச் சொல்லி யிருப்பதை எடுத்துக் காட்டினர்.

திரு. ரங்கஐயர் சட்ட மறுப்பு இயக்கத்தைத் தமது சிஷ்யர்கள் நடத்த வேண்டுமா வேண்டாமா என்ற கேள்விக்கு பதிலளிப்பதைத் தவிர்த்து வெளியிட்ட அறிக்கையைப் பற்றிக் குறிப்பிட்டார்.

இதற்கு ஸர் ஹெயிக் விடை யளிக்கையில் கூறியதாவது:—சட்ட மறுப்பு இயக்க சம்பந்தமாகத் தமது மனப்பான்மையைத் தெரிவிக்கும்படி கேட்கப் பட்ட கேள்விக்கு திரு. காந்தி திட்டமான பதிலைத் தெரிவிக்க வில்லை யென்பது முற்றிலும் உண்மையாகும். ஆனால் அவரது அறிக்கைக்கு எனது நண்பர் செய்ய விரும்பும் வியாக்யானத்திற்கு நேர்மாறான வியாக்கியானத்தைச் செய்யக் கூடுமென்று நான் நினைக்கின்றேன். ஜனவரி ௩௯-ந் தேதி யன்று வெளியான பம்பாய்க் காங்கிரஸ் புலட்டின் இந்த அறிக்கைக்குச் "சட்டமறுப்பில் நம்பிக்கைகொண்ட காங்கிரஸ்காரர்கள் அதனைத் தமது ஊக்கமனைத்தையும் கொண்டு நடத்த வேண்டுமென்பது இந்த அறிக்கையின் தெளிவான உள் அர்த்தமாகும்" என்று வியாக்கியானம் செய்திருக்கிறது.

(௧௨-ம் பக்கத் தொடர்ச்சி)

| | |
|---|---|
| கட்டியாக வைத்திருப்பதன் மதிப்பு | ரூ—32,27,35,835 |
| வெள்ளிக் கட்டியாக வைத்திருப்பது | ரூ—1,10,95,50,474 |
| அரசாங்க செக்யூரிட்டி மூலம் வைத்திருப்பது | ரூ—33,84,96,039 |
| இங்கிலாந்தில் நோட்டுத் தங்க சேமநிதி (தங்கக்கட்டி வைத்திருப்பது.) | |
| ஸ்டர்லிங்செக்யூரிட்டியாக வைத்திருப்பது | ரூ—15,23,946 |
| அரசாங்கப்பொக்கிஷத்தில் வைத்திருக்கும் நோட்டுகள் | ரூ—2,03,91,397 |

௧௯௨௧-௧௯௩௦ தங்கமதிப்புச்சேமநிதி

| | |
|---|---|
| ௧௯௩௨-௧௯௩௦ வருடத்திய தங்க சேமநிதி இருப்பு ஸ்டர்லிங்குகள் | —38,832,962 |

இந்தச் சேமநிதியை வைத்திருக்கும் விதங்கள்:

| | |
|---|---|
| இங்கிலாந்து பாங்கில் தங்கக் கட்டியாக இருப்பது பவுன் | 2152,334 |
| இங்கிலாந்து பாங்கில் பவுன் நாணயமாக வைத்திருப்பது | 3,748 |
| பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளின் கவர்மெண்டு செக்யூரிட்டி மூலமும் லண்டன் கார்ப்பரேஷன் பாண்டு மூலமும் இருப்பது | 37,843,918 |

இந்தக் கணக்குகள் ௧௯௩௦ வருஷம் மார்ச்சுமீ ௩௧-தேதி முடிய உள்ளவை

௧௯௩௨-ம் வருட நிலைமை.

| | |
|---|---|
| ௧௯௩௨—ம் வருடம் ஏப்ரல்மீ ௧-உ ஆரம்பத்தில் இருந்த தங்கச்சேமநிதி | 39 962,517 |
| இத்துடன் வட்டி மூலமும் பில்களுக்கு கமிஷன் கழித்துக் கொடுத்தின மூலமும் | 1,713,154 |
| | [illegible]5,671 |
| இதில் செல[illegible] [illegible]த்துக் | |
| கொண்டது | [illegible]0,000 |
| ரெவினியூவை [illegible]டுத்து | |
| வைக்கும் பண்டுக்[illegible] | [illegible],719, |
| | (ஜ. ர.) |

Reg. No. M. 1509. (12 Pages.) Price O-1-6. Tel: "Oolian"

SUBSCRIPTIONS.
Annual Subscription Rs. 5
Half yearly " Rs. 3
Foreign Annual " Rs. 7

# ஊழியன்.

ADVERTISEMENTS.
One Inch S. C. per insertion As. 8
Court Notices, per inch Re. 1
Long Standing Advts given concessions.

## The "Oolian" a Nationalist Weekly.

Editor: Raya. Chockalingan.

Truth Persists. Service Shines.

Vol. XIII. Karaikudi—Wednesday 15th February 1933. No 8

## இந்திய நாணய மாற்று.

### சில வார்த்தைகளின் விளக்கம்.

சேமநிதி, நோட்டுப் புள்ளி விவரங்கள்.

ககஉ௦-ம் வருஷம் ஜூன் மாத "மாடர்ன் ரிவ்யூ"ப் பத்திரிகையில் புரொபஸர் உபேந்திரநாத்பால் அவர்கள் "இந்திய நாணய மாற்றும் நாணயச் செலாவணியும்" என்ற தலைப்புடன் எழுதிய ஆராய்ச்சியான கட்டுரையைச் சென்ற சில வாரங்களில் "ஊழிய"னில் தாராளமாக மொழி பெயர்த்து வெளியிட் டிருக்கிறேன். அதனை நண்பர்கள் நன்ருகப் படித்திருப்பார்களென நம்புகிறேன். ஸ்டர்லிங்கையும்-ரூபாயையும் பிணைப்பது பயன் தராது என்று அதில் புரொபஸர் டலால் அவர்கள் மிக நன்ருக விளக்கியிருக்கிருர்கள். என்ருலும் அரசாங்கத்தார் ஸ்டெர்லிங்கையும் ரூபாயையுமே அப்பொழுது பிணைத்துவிட்டார்கள். ஆனால், ஸ்டெர்லிங்குக்கும் தங்கத்துக்கும் ககஉரு-ம் ஆண்டில் மறுபடியும் இணைப்பு ஏற்பட்டதால், இந்திய நாணயச் செலாவணிக்கு அதிகப் பாதகம் ஏற்படவில்லை. நாணய மாற்று விகித சம்பந்தமான சாதக பாதகங்களை இங்கு நாம் கவனிக்க வேண்டாம்; இந்திய நாணயமான ரூபாய்க்கு ஓர் நிர்ணயமான தங்க மதிப்பு இருந்து வந்தது என்ற ஒரு விஷயத்தை மட்டுந்தான் நாம் இங்குக் கவனிக்க வேண்டும்.

### சமீப நிகழ்ச்சி.

ஆனல், ககூகக-ம் வருடம் கக-ம் தேதி இரவு முதல் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் தங்க மதிப்பை ஆதாரமாகக் கொண்ட நாணய மாற்று முறையைக் கைவிட்டு விடுவதாக அறிக்கைசெய்து விட்டார்கள். உடனே, இந்திய அரசாங்கத்தார், ஸ்டெர்லிங்கு-ரூபாய்ப் பிணைப்பை எடுத்துவிட்டார்கள். ஆனல், இந்தியா மந்திரி வற்புறுத்திய தன் மேல், ஸ்டெர்லிங்கு-ரூபாய்ப் பிணைப்பை இந்திய அரசாங்கத்தார் ஒரு வாரத்துக்குள் மறுபடியும் ஏற்படுத்திவிட்டார்கள். இதனல், ரூபாய் தனித்தியங்கவும் முடியவில்லை; ஒரு தங்க மதிப்பும் அற்றதாகி விட்டது. நிர்ணயமற்ற பிரிட்டிஷ் நாணயமான ஸ்டெர்லிங்கு(நோட்டு)டன் பிணைக்கப் பட்டது. இதுவரை அந்நிலைதான் இருந்து வருகிறது. இந்திய நாணய மாற்றுச் சம்பந்தமான சில முக்கியச் சொற்களின் விளக்கங்களையும், சில முக்கியப் புள்ளி விவரங்களையும் கீழே தந்திருக்கிறேன். இவையும் "மாடர்ன் ரிவ்யூ"வின் பழைய இதழ்களினின்றும் எடுக்கப்பட்டவையாகும்.

### இங்கிலாந்துச் செலவுகள்.

இந்திய அரசாங்கத்தின் சார்பாக இந்தியா மந்திரி இங்கிலாந்தில் பெருந் தொகைகளை வருடந்தோறும் செலவழிக்கிருர். இவற்றிற்குப் பொது வான பெயர் இங்கிலாந்துச் செலவுகள் (Home charges) என்பதாகும். இங்கிலாந்தில் இந்திய அரசாங்கத்தார்மீது ஏற்பட்டிருக்கும் புரோ நோட்டுகளின் வட்டி, இங்கிலாந்தில் கொடுக்கவேண்டிய உபகாரச்சம்பளங்கள் (Pensions), ஓய்வு காலச் சம்பளங்கள் (Furlough Allowances) முதலியன இந்த இங்கிலாந்துச் செலவில் அடங்கும்.

### கவுன்ஸில் பில்.

இதற்கு வேண்டிய பணத்தை இந்திய அரசாங்கத்தார்மீது உண்டியல்கள் எழுதி அவற்றை விற்பனை செய்வதன் மூலமாக இந்தியா மந்திரி பெறுகிருர். இந்த உண்டியல்களுக்கு ஆங்கிலத்தில் கௌன்சில் பில் (Council Bill) அல்லது கௌன்சில் டிராப்ட் (Council draft) என்று பெயர். இந்திய அரசாங்கத்தாரிடமிருந்து பணம் பெறவேண்டியதான இந்த உண்டியல்களை இந்தியாவுக்குப் பணம் அனுப்ப வேண்டியவர்கள் இங்கிலாந்தில் விலைக்கு வாங்குகிருர்கள். தமக்குத் தேவையான பணத்தை இந்தியா மந்திரி ஸ்டர்லிங்குகளாக இந்த உண்டியல் விற்பனை மூலம் லண்டனில் பெற்றுக் கொள்ளுகிருர். இந்த உண்டியல்களை விலைக்கு வாங்கியவர்கள் இவற்றை இந்தியாவிற்கு அனுப்புகிருர்கள். கல்கத்தா பம்பாய் சென்னை ஆகிய இடங்களிலுள்ள இம்பீரியல் பாங்கியிலிருந்து இவற்றிற்குத் தொகை கொடுக்கப் படுகிறது.

### ஏற்றுமதி பில்.

லண்டனில் இந்த உண்டியல்களுக்குக் கிராக்கி இருந்து வருகிறது. இந்தியா அந்நிய நாடுகளோடு செய்யும் வியாபாரத்திற்கு உதவி செய்யும் நாணயமாற்று பாங்குகள் (Exchange Bank) இந்தியாவிலிருக்கின்றன. இந்தியாவிலிருந்து ஏற்றுமதியாகும் சரக்குகளின் விலையை இந்தப் பாங்குகள் ரூபாய்களாக வியாபாரிகளுக்குச் செலுத்திவிடுகின்றன. சரக்குகள் எந்த நாட்டிற்கு அனுப்ப படுகின்றனவோ அந்த நாட்டின்மீது ஏற்றுமதிக் கச்சாத்துகள் (Export bills) என்ற உண்டியல்களை எழுதி லண்டனுக்கு அனுப்பிவிடுகின்றன. உலகத்தின் பற்பல பாகங்களிலுமுள்ள பெரிய பாங்குகள் ஒவ்வொன்றுக்கும் லண்டனில் ஒவ்வொரு கிளை இருக்கிறது. நாட்டுக்கு நாடு நடக்கும் பற்று வரவுகள் எல்லாம் இந்தக் கிளைகளின் மூலமாக இங்கிலாந்து பாங்கியுடன் பற்று வரவு செய்வதனல் நேர் செய்து கொள்ளப்படுகின்றன. அங்கே இந்த உண்டியல்களுக்குத் தொகை கொடுக்கப்படுகின்றது. இந்தியாவுக்கு இறக்குமதியாகும் சாமான்களுக்கு அந்தந்த நாட்டு பாங்கிகளின் கிளைகள் இவ்வாறே பணம் கொடுத்துவிட்டுப் பண வசூலுக்காக தங்கள் உண்டியல்களை இந்தியாவிற்கு அனுப்புகின்றன. இதனல் இந்தியா ஏற்றுமதி செய்யும் சாமான்களால் இந்திய நாணயமாற்று பாங்கிகளிலுள்ள பணம் குறையும்; இந்தியாவில் இறக்குமதி ஆகும் சாமான்களால் அவற்றிலுள்ள பணம் அதிகரிக்கும்.

### பாலன்ஸ் அவ் டிரேட்.

ஆனல் எப்பொழுதும் வியாபார மிச்சம் (Balance of Trade) அதாவது ஏற்றுமதி இறக்குமதி இவற்றின் மதிப்பின் மொத்த வித்தியாசம் எப்பொழுதும் இந்தியாவிற்குச் சாதகமாகவே இருக்கிறது. அதாவது இந்தியாவின் மொத்த ஏற்றுமதிகளின் மதிப்பு அதன் மொத்த இறக்குமதிகளின் மதிப்பைவிட எப்பொழுதும் அதிகமாகவே இருக்கிறது. ஆகையால் இந்தியாவிலுள்ள நாணயமாற்று பாங்குகள் தங்களிடம் குறைந்துகொண்டே இருக்கும் பணத்திற்கு ஈடுசெய்து கொண்டே வரவேண்டி யிருக்கிறது. இதற்காக அவை லண்டனில் இந்தியா மந்திரி உண்டியல்களை (கவுன்ஸில் பில்) வாங்கி அவற்றிற்கு இந்தியாவில் தொகை பெற்ருே அல்லது தங்கத்தையும், வெள்ளியையும் இறக்குமதிசெய்து அவற்றை இந்தியாவில் விற்ருே பணம் பெறவேண்டியிருக்கிறது.

### ரிவர்ஸ் கவுன்ஸில் பில்.

சிலசமயம் இந்தியா மந்திரி தொகை கொடுக்கும்படியாக இந்திய அரசாங்கத்தார் உண்டியல்கள் எழுதி விற்பனை செய்வதும் உண்டு. இந்த உண்டியல்களுக்கு ஆங்கிலத்தில் (Reverse Bills) அல்லது (Reverse councils) அல்லது (Sterling drafts) என்று பெயர். இந்தியாவின் வியாபார மிச்சம் இந்தியாவிற்குப் பாதகமாக அதாவது இந்தியாவின் மொத்த ஏற்றுமதியின் மதிப்பை விட மொத்த இறக்குமதி மதிப்பு அதிகமாக ஏற்படும் பொழுது இந்த உண்டியல்களின் விற்பனை அவசியமாகின்றது. இந்தியா மந்திரி உண்டியலுக்கு (கவுன்ஸில் பில்) இந்தியாவில் இந்திய நாணயமாகக் கொடுப்பதாகத்தான் அதை விற்கிருர்கள். அதற்கு இங்கிலாந்தில் பணம் வாங்குங்காலத்தில் இங்கிலீஷ் நாணயமாகக் கொடுக்க வேண்டும். 'இந்திய அரசாங்க உண்டியல் (ரிவர்ஸ் கவுன்ஸில் பில்) இந்தியாவில் விற்கப்படும். இதை இந்திய நாணயமாகக் கொடுத்து வாங்க வேண்டும். இதற்கு இங்கிலாந்தில் இங்கிலாந்து நாணயமாகக் கொடுப்பதாக ஒப்பந்தம் இருக்கிறது.

### இம்பீரியல் பாங்கு அவ் இந்தியா.

ககூஉக௵ ஜனவரிமீ உஎஉ மகாணபாங்குகளாக வங்காளம் பம்பாய் சென்னை முதலிய இடங்களிலிருந்தவற்றை ஒன்ருகச் சேர்த்து இம்பீரியல் பாங்கு அவ் இந்தியா என்று ஏற்படுத்தினர்கள்.

ககூ௩௦ ௵ நோட்டு நாணய [illegible] விருவரை வெளி[illegible]கொண்டிருந்தகை— [illegible] 1,77,23,06,294 [illegible] வைக்கப்பட்டிருக் தங்கச் சேமநிதி தங்கக் [illegible] பக்கம் பார்க்க.)

